அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீஜக³த்³கு³ருக்³ரந்த²மாலா

# ॥ तत्त्वोपदेशः ॥

# தத்வோபதே³ஶம்

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத்தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாஜலயில் ஸ்ரீ சங்கரபகவத்பாதா சார்யார் அருளிய கிரந்தங்களில் **தத்வோபதே³ஶம்**, என்ற பிரகரணத்துக்கு வழக்கம்போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

**தத்வோபதே³ஶம்**: எவ்வளவு படித்தவனுக இருந்தாலும், புத்திமானுக இருந்தாலும், குருவின் உபதேசம் இருந்தால்தான் அத்வைதனுபூதி வரும். குருவின் உபதேசம் இப்பிரகரணத்தில் காட்டப்படுகிறது. அதிலும் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆருணி என்ற குரு தன் புத்ரனும் சிஷ்யனுமான ச்வேதகேதுவுக்கு உபதேசித்த தத்வமஸி மஹாவாக்யத்திலுள்ள பதார்த்த வாக்யார்த்தங்கஜள விரிவாக விளக்கி காந்தாரபுருஷ திருஷ்டாந்தத்தைக் காட்டி ஜீவனே ப்ரஹ்மம் என்பதை நிரூபணம் செய்கிருர். கடைசியில் குருவின் மஹிமையையும் குருவினிடம் சிஷ்யன் நடந்து கொள்ள வேண்டிய முறைகஜளயும் அழகாகக் காட்டுகிருர். இந்தப் பிரகரணங்கஜள வாசிப்பதால் உபநிஷத்துக்களின் கருத்துக்கஜள நன்ருகத் தெரிந்துகொள்வதுடன் அவைகஜள வாசிப்பதற்கும் உபயோகமாக இருக்கும்.

ஸ்ரீ பகவத்பாதாள் அருளிய உயர்ந்த இந்த நூல் சிறந்த முறையில் வெளி வரும்படி பரமானுக்ரஹம் செய்து உள்ள சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் மலரடிகஜள எப்பொழுதும் பணிவோமாக.

**K.V. சுப்பரத்னம் அய்யர்,**
பொதுக் கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

॥ श्रीः ॥

॥ ஸ்ரீ: ॥

# ॥ तत्त्वोपदेशः ॥

# தத்வோபதே³ஶம்

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[சாந்தோக்ய உபநிஷத்தில் 'தத்த்வமஸி' என்ற மஹாவாக்யம் காணப்படுகிறது. இது ஆசார்யன் சிஷ்யனைப் பார்த்து உபதேசிப்பதாக அமைந்திருக்கிறது. இதில் தத், த்வம், அஸி என்று மூன்று பதங்கள் இருக்கின்றன. த்வம் என்ற பதத்திற்கு நீ என்று பொருள். இது ஜீவனைக்குறிக்கிறது 'தத்' என்ற பதத்திற்கு அது என்று பொருள் இது முன் கூறப்பட்ட ஸத்ரூபமான ப்ரஹ்மத்தைக்குறிக்கிறது ஆகவே நீ அதுவாக இருக்கிறாய் அதாவது 'ஜீவனே ப்ரஹ்மம்' என்பது இந்த வாக்யத்தின் பொருள். ஆனால் ஜீவன் ஒருக்காலும் ப்ரஹ்மமாக ஆகமுடியாது. ஜீவஸ்வரூபத்தில் பல தர்மங்கள் இருக்கின்றன. இதற்கு விருத்தமான பல தர்மங்கள் ஸத் வஸ்துவில் இருக்கின்றன. ஒன்றுக்கொன்று விருத்தமான பல தர்மங்களை உடைய இரண்டு வஸ்துக்கள் ஒன்றாக இருக்க முடியாது. உபநிஷத்தோ ஒன்றுதான் என்று உபதேசிக்கிறது. இது அப்ரமாணம இல்லை. ஆகையினால் 'தத்வோபதேசம்' என்ற இந்த ப்ரகரணத்தில் மஹா வாக்யத்திலுள்ள 'த்வம்' பதத்தின் பொருளையும் 'தத்' பதத்தின் பொருளையும் நன்கு சோதித்துக்காட்டுகிறார். அதாவது ஜீவனிடத்திலும் ஈசுவரனிடத்திலும் தோன்றும் பரஸ்பர விருத்தமான தர்மங்கள் எல்லாம் உண்மையில் ஜீவஸ்வரூபத்திலோ, ஈசுவர ஸ்வரூபத்திலோ சேர்ந்தவையல்ல. ப்ரமத்தால் அவ்வாறு தோன்றுகிறது என்று கூறி அந்த தர்மங்களை எல்லாம் விலக்கி சுத்தமான ஜீவஸ்வரூபத்தையும் ஈசுவரஸ்வரூபத்தையும் காட்டி விரோதமில்லாமையால் இரண்டும் ஒன்றுதான் என்று தீர்மானிக்கிறார். தத், த்வம் என்ற இரு பதங்களின் லக்ஷ்யார்த்தமான ப்ரஹ்ம தத்வத்தை உபதேசிப்பதால் இதற்குத் 'தத்வோபதேசம்' எனறு பெயர் ஏற்பட்டிருக்கிறது. குருவின் உபதேசத்தால் தான் இந்த தத்வம் அநுபவத்திற்கு வரும் என்று கூறி ஸ்ரீ குருவின் பெருமையை நன்கு விளக்குகிறார். அத்வைத தத்வத்தை ஸ்தாபிக்க பிரபஞ்சம் பொய் என்பதையும் காட்டுகிறார். பரமாத்மாவே தான் அக்ஞானத்தால் ஜீவனாகத்தோன்றுகின்றான். பந்தமும் பொய் தான். ஆசார்யரின் உபதேசத்தால் தன் ஸ்வரூபத்தை நன்கு அறிந்ததும் எல்லாத் துன்பங்களும் விலகி பரமானந்தத்தையடைகிறான் என்பதைக்காட்ட உபநிஷத்தில் கூறப்பட்ட காந்தாரதிருஷ்டாந்தத்தை நன்கு விளக்குகிறார். கடைசியில் குருவின் பெருமையைக்காட்டி முடிக்கிறார்.]

**तत्त्वंपदार्थशुद्ध्यर्थं गुरुः शिष्यं वचोऽब्रवीत् ।**
**वाक्ये तत्त्वमसीत्यत्र त्वम्पदार्थं विवेचय ॥ १॥**

**தத்த்வம்பதா³ர்த²ஶுத்³த்⁴யர்த²ம் கு³ரு꞉ ஶிஷ்யம் வசோ(அ)ப்³ரவீத் ।**
**வாக்யே தத்த்வமஸீத்யத்ர த்வம்பதா³ர்த²ம் விவேசய ॥ 1॥**

| | | |
|---|---|---|
| **गुरुः** கு³ரு꞉ | = | ஆசார்யர், |
| **तत्त्वंपदार्थशुद्ध्यर्थं** தத்த்வம்பதா³ர்த²ஶுத்³த்⁴யர்த²ம் | = | தத், த்வம் என்ற இரு பதங்களின் பொருளை சுத்தமாக (கலப்பில்லாமல்) செய்ய, |
| **शिष्यं** ஶிஷ்யம் | = | சிஷ்யனைப்பார்த்து, |
| **वचः** வச꞉ | = | பின்வரும் வார்த்தையை, |
| **अब्रवीत्** அப்³ரவீத் | = | சொன்னார், |
| **तत्त्वमसीति** தத்த்வமஸீதி | = | "தத்த்வமஸி” என்ற, |
| **अत्र वाक्ये** அத்ர வாக்யே | = | இந்த வாக்யத்தில், |
| **त्वम्पदार्थं** த்வம்பதா³ர்த²ம் | = | 'த்வம்' என்ற பதத்தின் பொருளை, |
| **विवेचय** விவேசய | = | பிரித்துத்தெரிந்துகொள். |

சாந்தோக்யோபநிஷத்தில் 'தத்த்வமஸி' என்ற மஹாவாக்யத்திலுள்ள 'தத், த்வம்' என்ற இரு பதங்களின் பொருளையும் கலப்பில்லாமல் பரிசுத்தமாக, அதாவது ஜீவனுடைய உண்மை ஸ்வரூபத்தையும் ஈசுவரனுடைய உண்மை ஸ்வரூபத்தையும் சிஷ்யன் அறிந்து கொள்வதற்காக குரு சிஷ்யனுக்கு உபதேசிக்கிறார். தத்த்வமஸி என்ற மஹாவாக்கியத்தில் முதலாவதாக ‘த்வம்’ பதத்தின் பொருளை நன்கு பாகுபாடு செய்து தெரிந்து கொள். அதாவது உண்மையில் ஜீவனுடைய ஸ்வரூபத்தில் சேராத பொருள்களையெல்லாம் விலக்கிவிடு. **(1)**

**(அவதாரிகை)** தேஹம் ஆத்மாவல்ல என்பதை இரண்டு சுலோகங்களால் கூறுகிறார்: -

**न त्वं देहोऽसि दृश्यत्वाद्रूपजात्यादिमत्वतः ।**
**भौतिकत्वादशुद्धत्वादनित्यत्वात्तथैव च ॥ २ ॥**

**ந த்வம் தே³ஹோ(அ)ஸி த்³ருஶ்யத்வாத்³ரூபஜாத்யாதி³மத்வத꞉ ।**
**பௌ⁴திகத்வாத³ஶுத்³த⁴த்வாத³நித்யத்வாத்ததை²வ ச ॥ 2 ॥**

**अदृश्यो रूपहीनस्त्वं जातिहीनोऽप्यभौतिकः ।**
**शुद्धनित्योऽसि दृग्रूपो घटो यद्वन्न दृग्भवेत् ॥ ३ ॥**

**அத்³ருஶ்யோ ரூபஹீனஸ்த்வம் ஜாதிஹீனோ(அ)ப்யபௌ⁴திக꞉ ।**
**ஶுத்³த⁴நித்யோ(அ)ஸி த்³ருக்³ரூபோ க⁴டோ யத்³வன்ன த்³ருக்³ப⁴வேத் ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **दृश्यत्वात्** த்³ருஶ்யத்வாத் | = | அறியப்படுவதாலும், |
| **रूपजात्यादिमत्वतः** ரூபஜாத்யாதி³மத்வத꞉ | = | ரூபம், ஜாதி முதலியவைகளுடன் கூடியிருப்பதாலும், |
| **भौतिकत्वात्** பௌ⁴திகத்வாத் | = | பூதங்களிலிருந்து உண்டாகியிருப்பதாலும், |
| **अशुद्धत्वात्** அஶுத்³த⁴த்வாத் | = | அசுத்தமாயிருப்பதாலும், |
| **तथैव** ததை²வ | = | அவ்விதமே, |
| **नित्यत्वात्त** நித்யத்வாத்த | = | அழிந்து போவதாலும், |
| **त्वं** த்வம் | = | நீ, |
| **न देहोऽसि** ந தே³ஹோ(அ)ஸி | = | தேஹமாயிருக்கவில்லை. |

| | | |
|---|---|---|
| **त्वं** த்வம் | = | நீ, |
| **अदृश्यः** அத்³ருஶ்ய꞉ | = | அறியப்படாதவனாயும், |
| **रूपहीनः** ரூபஹீன꞉ | = | ரூபமற்றவனாயும், |
| **जातिहीनोपि** ஜாதிஹீனோபி | = | ஜாதியில்லாதவனாயும், |
| **अभौतिकः** அபௌ⁴திக꞉ | = | பூதங்களிலிருந்து உண்டாகாதவனாயும், |
| **शुद्धनित्यः** ஶுத்³த⁴நித்ய꞉ | = | சுத்தனாயும் அழிவில்லாதவனாயும், |
| **दृग्रूपः** த்³ருக்³ரூப꞉ | = | ஞானரூபியாயும், |

| | | |
|---|---|---|
| **असि** <br> **அஸி** | = | இருக்கிறாய், |
| **घटः** <br> **க⁴ட:** | = | குடம், |
| **यद्वत्** <br> **யத்³வத்** | = | எவ்விதம், |
| **दृक्** <br> **த்³ருக்** | = | ஞானமாக, |
| **न भवेत्** <br> **ந ப⁴வேத்** | = | ஆகாதோ (அவ்விதம் தேஹமும் ஆத்மாவாக ஆகாது.) |

நீ என்றும், நான் என்றும், சொல்லுமிடங்களிலெல்லாம் ஸ்தூலமான சரீரத்தையே குறிப்பிடுகின்றனர். ஆகவே சரீரத்தையே ஆத்மா என்று எல்லோரும் எண்ணிக் கொண்டிருக்கின்றனர். இதைக்கொண்டே சார்வாக தர்சனம் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் முதலில் தேஹம் ஆத்மா அல்ல என்பதைக் காட்டுகிறார். தேஹத்தில் நாம் காணும் தர்மங்கள் எல்லாம் ஆத்மாவில் இல்லை என்று ச்ருதி கூறுகிறது. தேஹ தர்மங்கள் ஆத்மாவில் இல்லாததாலும் இதற்கு எதிரிடையான தர்மங்கள் ஆத்மாவில் இருப்பதாலும் தேஹம் ஆத்மாவன்று. அதாவது, தேஹம் இந்திரியங்களாலும் மனதாலும் அறியப்படும் வஸ்து. அதாவது ஜடம். ஆத்மாவோ ஒன்றினாலும் அறியப்படாதது. சைதன்ய ஸ்வரூபமானது. ஜடமான குடம் ஞான ரூபமாக ஆகுமா? அதுபோல ஜடமான தேஹமும் சேதனமான ஆத்மாவாக இருக்கமுடியாது. மேலும் தேஹத்தில் உருவமும், கருப்பு, சிவப்பு முதலான நிறங்களும் மனுஷ்யன் முதலான ஜாதியும் காணப்படுகின்றன. ஆத்மாவிற்கு உருவமோ, நிறமோ, ஜாதியோ ஒன்றும் கிடையாது. ஆத்மாவிற்குப் பிறப்பே கிடையாது சரீரமோ ஐந்து பூதங்களிலிருந்து உண்டானது. எல்லாவித அசுத்திகளும் நிறைந்தது சரீரம். ஆத்மா ஒருவித அழுக்கும் இல்லா பரிசுத்த வஸ்து. சரீரம் அழிந்து போவதை நாம் பார்க்கிறோம். ஆத்மாவுக்கு அழிவே கிடையாது. ஆத்மா ஞானஸ்வரூபம், தேஹம் ஜடம். இவ்வாறு எதிரிடையான தர்மங்கள் இருப்பதால் தேஹம் ஆத்மாவன்று. **(2-3)**

**(அவதாரிகை)** இந்திரியம் ஆத்மாவல்ல என்பதை ஐந்து சுலோகங்களால் கூறுகிறார்: -

**न भवानिन्द्रियाण्येषां करणत्वेन यत् श्रुतिः ।**
**प्रेरकस्त्वं पृथक् तेभ्यो न कर्ता करणं भवेत् ॥ ४ ॥**

**ந ப⁴வானிந்த்³ரியாண்யேஷாம் கரணத்வேன யத் ஶ்ருதி: ।**
**ப்ரேரகஸ்த்வம் ப்ருத²க் தேப்⁴யோ ந கர்தா கரணம் ப⁴வேத் ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **भवान्**<br>**ப⁴வான்** | = | நீ, |
| **न इन्द्रियाणि**<br>**ந இந்த்³ரியாணி** | = | இந்திரியங்கள் அல்ல, |
| **यत्**<br>**யத்** | = | ஏனெனில், |
| **एषां**<br>**ஏஷாம்** | = | இவைகள், |
| **करणत्वेन**<br>**கரணத்வேன** | = | கரணமாக, |
| **श्रुतिः**<br>**ஶ்ருதிஃ** | = | கேட்கப்படுகிறது, |
| **प्रेरकः**<br>**ப்ரேரகஃ** | = | (அவைகளை) ஏவுகின்ற, |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **तेभ्यः**<br>**தேப்⁴யஃ** | = | அவைகளைக்காட்டிலும், |
| **पृथक्**<br>**ப்ருத²க்** | = | வேறானவன், |
| **कर्ता**<br>**கர்தா** | = | செய்கிறவன், |
| **करणं**<br>**கரணம்** | = | கருவியாக, |
| **न भवेत्**<br>**ந ப⁴வேத்** | = | ஆகமாட்டான். |

இந்த்ரியங்கள் கரணமானதால் ஆத்மாவல்ல. நான் கண்ணால் பார்க்கிறேன், நான் காதால் கேட்கிறேன் என்று கூறுகிறான். இங்கு தன்னைப்பார்க்கிறவனாகவும், கேட்கிறவனாகவும், கண், காது முதலிய இந்த்ரியங்களைக் கருவிகளாகவும் கூறுகிறான். ஆகவே பார்ப்பது, கேட்பது முதலான செய்கைகளில் ஆத்மா கர்த்தாவா கவும் இந்த்ரியம் கரணமாகவும் ஆகிறது. கர்த்தா தன் இஷ்டப்படி கருவிகளை ஏவுகிறான். கர்த்தா ஒருக்காலும் கரணமாகமுடியாது. ஆகையால் இந்த்ரியங்கள் ஆத்மாவல்ல.

**नानैतान्येकरूपस्त्वं भिन्नस्तेभ्यः कुतः शृणु ।**
**न चैकेन्द्रियरूपस्त्वं सर्वत्राहम्प्रतीतितः ॥ ५॥**

**நாஜனதான்யேகரூபஸ்த்வம் பி⁴ன்னஸ்தேப்⁴ய: குத: ஶ்ருணு ।**
**ந சைகேந்த்³ரியரூபஸ்த்வம் ஸர்வத்ராஹம்ப்ரதீதித: ॥ 5॥**

| | | |
|---|---|---|
| **एतानि** ஏதானி | = | இந்த இந்திரியங்கள், |
| **नाना** நானு | = | பலவாக இருக்கின்றன, |
| **एकरूप:** ஏகரூப: | = | ஒரே ஸ்வரூபமுள்ள, |
| **त्वं** த்வம் | = | நீ, |
| **तेभ्य:** தேப்⁴ய: | = | அவைகளைக்காட்டிலும், |
| **भिन्न:** பி⁴ன்ன: | = | வேறுனவன், |
| **कुत:** குத: | = | ஏனெனில், |
| **शृणु:** ஶ்ருணு: | = | கேள் (சொல்கிறேன்), |
| **सर्वत्र** ஸர்வத்ர | = | எல்லா இந்திரியங்களிலும், |
| **अहंप्रतीतित:** அஹம்ப்ரதீதித: | = | நான் என்ற அறிவு ஏற்படுவதால், |
| **त्वं** த்வம் | = | நீ, |
| **एकेन्द्रियरूप:** ஏகேந்த்³ரியரூப: | = | ஏதாவது ஒரு இந்திரியமாக, |
| **नच** நச | = | இருக்க முடியாது. |

மேலும் கண், காது, மூக்கு, நாக்கு, த்வக் என்று இந்த்ரியங்கள் பலவாக இருக்கின்றன. ஆத்மாவோ ஒருவன். ஒன்று எப்படிப்பலவாக இருக்கமுடியும்? ஆகையால் பலவாக இருக்கும் இந்த்ரியங்களைக்காட்டிலும் ஒன்றுக உள்ள ஆத்மா வேறுதான். எவ்விதமெனில், இந்த்ரியக்கூட்டங்களில் ஏதோ ஒரு இந்த்ரியம் மட்டும் தான் ஆத்மாவா? அல்லது எல்லா இந்த்ரியங்களும் சேர்ந்து ஆத்மாவா? அல்லது ஒவ்வொரு இந்த்ரியமும் ஆத்மாவா? முதலில் சொன்னது சரியல்ல. நான் என்பது ஆத்மாவைக்குறிக்கும் சொல். ஒரு இந்திரியம் மட்டும்தான் ஆத்மா வென்றுல் அந்த இந்திரியத்தில்தான் நான் என்ற எண்ணம் வரலாம். மற்ற இந்திரியங்களில் நான்

என்ற நிஜனப்பு வரக்கூடாது. உதாஹரணமாக கண்தான் ஆத்மா என்றல் 'நான் கேட்கிறேன்' என்று காதில் நான் என்ற எண்ணம் வரக்கூடாது. எல்லா இந்திரியங்களிலும் நான் என்று கூறுவதால் ஒரு இந்திரியம் ஆத்மா என்று கூறுவது சரியல்ல. பல இந்திரியங்களில் ஏதோ ஒன்றை மட்டும் ஆத்மா எனக்கூறுவதற்கு தனிப்பட்ட காரணமும் இல்ஜல.

**(அவதாரிகை)** இந்திரியக்கூட்டம் ஆத்மாவல்ல என்பதைக் கூறுகிறர்: -

**न तेषां समुदायोऽसि तेषामन्यतमस्य च ।**
**विनाशेऽप्यात्मधीस्तावदस्ति स्यान्नैवमन्यथा ॥ ६ ॥**

**ந தேஷாம் ஸமுதா³யோ(அ)ஸி தேஷாமன்யதமஸ்ய ச ।**
**விநாஶே(அ)ப்யாத்மதீ⁴ஸ்தாவத³ஸ்தி ஸ்யான்ஜைவமன்யதா² ॥ 6 ॥**

**तेषां** = அந்த இந்திரியங்களுடைய,
**தேஷாம்**
**समुदायः** = கூட்டமாக,
**ஸமுதா³ய:**
**नासि** = நீ இல்ஜல,
**நாஸி**
**तेषां** = அவைகளில்,
**தேஷாம்**
**अन्यतमस्य** = ஏதாவது ஒன்றுக்கு,
**அன்யதமஸ்ய**
**विनाशेपि** = அழிவு ஏற்பட்டாலும்,
**விநாஶேபி**
**आत्मधीस्तावत्** = நான் என்ற ஞானம்,
**ஆத்மதீ⁴ஸ்தாவத்**
**असित** = (ப்ரஸித்தமாக) இருக்கிறது,
**அஸித**
**अन्यथा** = இவ்வாறு இல்லா விட்டால்
**அன்யதா²** (ஸமுதாயம் ஆத்மாவாஞல்),
**एवं** = (ஒரு இந்திரியம் இல்லாதவனுக்கு)
**ஏவம்** இவ்வாறு நான் என்ற ஞானம்,
**न स्यात्** = உண்டாகாது.
**ந ஸ்யாத்**

எல்லா இந்திரியங்களும் சேர்ந்த கூட்டத்தையும் ஆத்மாவென்று கூறமுடியாது. குருடனுக்குக் கண் இல்ஜல. ஒரு இந்திரியம் இல்லாததால் எல்லா இந்திரியங்

களும் சேர்ந்த கூட்டம் அவனிடம் இல்லை. ஆகவே அவனுக்கு ஆத்மா இல்லை என்பதாக ஆகிவிடும். ஆனால் அவனும் தனக்கு ஆத்மா இருப்பதாக எண்ணித்தான் நான் என்று சொல்கிறன். இதுபோலவேதான் செவிடன் முதலியவர்களும். ஆதலால் இந்த்ரிய ஸமுதாயமும் ஆத்மாவல்ல. **(6)**

**(அவதாரிகை)** ஒவ்வொரு இந்த்ரியமும் தனித்தனியாக ஆத்மா என்ற வாதத்தைக் கண்டிக்கிறர்: -

**प्रत्येकमपि तान्यात्मा नैव तत्र नयं शृणु ।**
**नानास्वामिकदेहोयं नश्येद्भिन्नमताश्रयः ॥ ७ ॥**

**ப்ரத்யேகமபி தான்யாத்மா நைவ தத்ர நயம் ஶ்ருணு ।**
**நானாஸ்வாமிகதே³ஹோயம் நஶ்யேத்³பி⁴ன்னமதாஶ்ரய: ॥ 7 ॥**

**नानात्माभिमतं नैव विरुद्धविषयत्वतः ।**
**स्वाभ्यैक्ये तु व्यवस्था स्यादेकपार्थिवदेशवत् ॥ ८ ॥**

**நானாத்மாபி⁴மதம் நைவ விருத்³த⁴விஷயத்வத: ।**
**ஸ்வாப்⁴யைக்யே து வ்யவஸ்தா² ஸ்யாதே³கபார்தி²வதே³ஶவத் ॥ 8 ॥**

**तानि** = அந்த இந்திரியங்கள்,
**தானி**

**प्रत्येकमपि** = ஒவ்வொன்றும்,
**ப்ரத்யேகமபி**

**नैव आत्मा** = ஆத்மாவல்ல,
**நைவ ஆத்மா**

**तत्र** = அந்த விஷயத்தில்,
**தத்ர**

**नयं** = யுக்தியை,
**நயம்**

**शृणु** = கேள்,
**ஶ்ருணு**

**भिन्नमताश्रयः** = வெவ்வேறு அபிப்ராயங்களுக்கு இடமான,
**பி⁴ன்னமதாஶ்ரய:**

**अयं** = இந்த,
**அயம்**

**नानास्वामिकदेहः** = பலபேர்களை யஜமானர்களாக
**நானாஸ்வாமிகதே³ஹ:** உடைய தேஹமானது,

**नश्येत्** = அழிந்து விடும்.

**நஶ்யேத்**

**विरुद्धविषयत्वतः** = ஒன்றுக்கொன்று எதிரிடையான

**விருத்³த⁴விஷயத்வத꞉** விஷயங்களுள்ளதால்,

**नानात्मा** = பலர் ஆத்மா என்பது,

**நாநாத்மா**

**नैवाभिमतं** = ஒருவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதல்ல,

**நைவாபி⁴மதம்**

**स्वाभ्यैक्ये तु** = ஒரே யஜமானன் இருந்தால் தான்,

**ஸ்வாப்⁴யைக்யே து**

**एकपार्थिवदेशवत्** = ஒரே அரசனுள்ள தேசம் போல,

**ஏகபார்தி²வதே³ஶவத்**

**व्यवस्था** = கட்டுப்பாடு,

**வ்யவஸ்தா²**

**स्यात्** = இருக்கும்,

**ஸ்யாத்**

கண், காது முதலான இந்திரியங்களில் ஒவ்வொன்றும் ஆத்மா என்ற வாதமும் சரியல்ல. ஏனெனில் இந்த சரீரத்தில் ஆத்மாதான் யஜமானன். அவன் இஷ்டப்படிதான் சரீரத்தில் கார்யம் நடைபெறவேண்டும். ஒவ்வொரு இந்திரியமும் ஆத்மாவானல் ஒவ்வொரு இந்திரியமும் இந்த சரீரத்திற்குப் பூர்ண அதிகாரமுள்ள யஜமானன் ஆகும். பல யஜமானர்களுக்குக் கொள்கை ஒன்ருக இருக்குமானல் ஒத்துப்போகமுடியும். இதில்லாமல் வெவ்வேறு எதிரிடையான கொள்கைகள் கொண்ட பலர் ஒரு தேசத்திற்கு அரசர்களாக இருப்பார்களேயானல் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொள்வதன் மூலம் தேசம் அழிந்துவிடும். இதுபோல கண்ணுக்கு ரூபம் விஷயம், காதுக்கு சப்தம் விஷயம் இவ்விதமே ஒவ்வொரு இந்திரியத்திற்கும் வெவ்வேருன விஷயங்கள். எல்லோருக்கும் ஸமமான அதிகாரம் இருக்கிறது. இந்த நிலைமையில் கண் என்ற யஜமானன் ரூபத்தைப் பார்க்கவேண்டும் என்று சொல்லும். அதே சமயத்தில் காது என்ற யஜமானன் சப்தத்தைக்கேட்க வேண்டும் என்று சொல்லும். ஒரே சமயத்தில் இரண்டும் நடைபெற முடியாது. ஆகவே ஒன்றுக்கொன்று சண்டையிட்டுக்கொண்டு தேஹத்தையே அழித்துவிடும். ஆதலால் சரீரத்தில் பலர் யஜமானர்களாக இருக்கக்கூடாது. ஒரு தேசத்தில் ஒருவனே எல்லா அதிகாரங்களும் கொண்ட மஹாராஜனுக இருந்தால் அவனுக்குக் கட்டுப்பட்டு எலலோரும் நடப்பதால் ராஜ்ய பரிபாலனம் நன்கு நடைபெறும். இதுபோல் சரீரத்திலும் செவ்வனே காரியங்கள் நடைபெறுவதற்காக ஒரே ஆத்மாவை (யஜமானனை)த் தான் ஒப்புக்கொள்ளவேண்டும். **(7-8)**

**(அவதாரிகை)** பிராணனும் மனமும் ஆத்மாவல்ல என்பதை இரு சுலோகங்களால் கூறுகிருர்: -

**न मनस्त्वं न वा प्राणो जडत्वादेव चैतयोः ।**
**गतमन्यत्र मे चित्तमित्यन्यत्वानुभूतितः ॥ ९ ॥**

**ந மனஸ்த்வம் ந வா ப்ராணோ ஜட³த்வாதே³வ சைதயோ: ।**
**க³தமன்யத்ர மே சித்தமித்யன்யத்வானுபூ⁴தித: ॥ 9 ॥**

**क्षुत्तृड्भ्यां पीडितः प्राणो ममायं चेति भेदतः ।**
**तयोर्द्रष्टा पृथक्ताभ्यां घटद्रष्टा घटाद्यथा ॥ १० ॥**

**க்ஷுத்த்ருட்³யாம் பீடி³த: ப்ராணோ மமாயம் சேதி பே⁴த³த: ।**
**தயோர்த்³ரஷ்டா ப்ருத²க்தாப்⁴யாம் க⁴டத்³ரஷ்டா க⁴டாத்³யதா² ॥ 10 ॥**

| | | |
|---|---|---|
| **एतयोः**<br>**ஏதயோ:** | = | இவ்விரண்டும், |
| **जडत्वादेव**<br>**ஜட³த்வாதே³வ** | = | ஜடமாயிருப்பதாலேயே, |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **न मनः**<br>**ந மன:** | = | மனம் அல்ல, |
| **न वा प्राणश्च**<br>**ந வா ப்ராணஶ்ச** | = | பிராணனுமல்ல, |
| **मे**<br>**மே** | = | என்னுடைய, |
| **चित्तं**<br>**சித்தம்** | = | மனது, |
| **अन्यत्र**<br>**அன்யத்ர** | = | வேறிடத்தில், |
| **गतम्**<br>**க³தம்** | = | சென்றிருந்தது, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **अन्यत्वानुभूतितः**<br>**அன்யத்வானுபூ⁴தித:** | = | தன்னைக்காட்டிலும் வேறு பொருளாக அனுபவம் ஏற்படுவதால், (மனம் ஆத்மாவல்ல), |
| **मम**<br>**மம** | = | என்னுடைய, |
| **अयं**<br>**அயம்** | = | இந்த பிராணன், |

| | | |
|---|---|---|
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **भेदतश्च**<br>**பே⁴த³தஶ்ச** | = | வேற்றுமை தோன்றுவதாலும், |
| **क्षुत्तृड्यां**<br>**க்ஷுத்த்ருட்³யாம்** | = | பசிதாகங்களால், |
| **पीडित:**<br>**பீடி³த:** | = | துன்பப்பட்ட, |
| **प्राण:**<br>**ப்ராண:** | = | பிராணன் (ஆத்மாவல்ல), |
| **यथा**<br>**யதா²** | = | எவ்விதம், |
| **घटद्रष्टा**<br>**க⁴டத்³ரஷ்டா** | = | குடத்தைப்பார்க்கிறவன், |
| **घटात्**<br>**க⁴டாத்** | = | குடத்தைக்காட்டிலும், |
| **पृथक्**<br>**ப்ருத²க்** | = | வேறனவனே (அவ்வாறு), |
| **तयो:**<br>**தயோ:** | = | அந்த மனத்தையும் பிராணனையும், |
| **द्रष्टा**<br>**த்³ரஷ்டா** | = | அறிகிறவன், |
| **ताभ्यां**<br>**தாப்⁴யாம்** | = | அவைகளைக்காட்டிலும், |
| **पृथक्**<br>**ப்ருத²க்** | = | வேறனவன். |

மனமும், பிராணனும் ஜட வஸ்துக்கள். ஆத்மாவோ சேதனம். ஆகையால் ஜடமான மனமும் ப்ராணனும் ஆத்மாவாக முடியாது. மேலும் ஒருவன் முக்யமான ஒரு விஷயத்தைப்பற்றி தீவ்ரமாக சிந்தித்துக் கொண்டிருக்கிறன். அச்சமயம் நாம் அவன் எதிரில் போய் நின்றலும், கண் பார்த்தாலும்கூட நாம் வந்திருப்பதை அவன் அறிந்து கொள்வதில்லை. சிறிது நேரம் சென்ற பிறகு "என் மனம் வேறு எங்கேயோ சென்றிருந்தது. அதனல் நீ வந்ததை கவனிக்கவில்லை" என்று கூறுகிறன். இங்கு தன்னை விட்டு மனம் வெளியில் சென்றதாகக் கூறுவதால் மனம் தான் இல்லை, ஆத்மாவல்ல, மனத்தைக்காட்டிலும் ஆத்மா வேறு என்று தெரிகிறது. இதுபோல 'என்னுடைய பிராணன்' என்று கூறுவதால் பிராணனைக் காட்டிலும் ஆத்மா வேறகத்தானிருக்கவேண்டும். 'என்னுடைய வீடு' என்று சொல்லும்பொழுது உடமை யான வீட்டைக் காட்டிலும் உடையவன் வேறகத்தானே இருக்கிறன். இந்த யுக்தியை

மனதிற்கும் கொள்ளலாம். மேலும ஆஹாரம் இல்லாதபொழுது பசியாலும், தண்ணீர் இல்லாதபொழுது தாகத்தாலும் பிராணன் துன்புறுகிறது. இவ்விரண்டும் பிராணனின் தர்மங்கள். ஆத்மாவோ துன்பமற்ற ஆனந்த ரூபமான வஸ்து. ஆகையினுலும் பிராணன் ஆத்மாவல்ல. மேலும் 'நான் குடத்தைப் பார்க்கிறேன்' என்று சொல்கிறுன். இங்கு பார்க்கப்படும் குடத்தைக் காட்டிலும் பார்க்கிறவன் வேறுகத்தானிருக்கிறுன். இதுபோல பிராணனும், மனமும் அறியப்படும் பொருள்களாகையால் இவைகஊ அறிகின்ற ஆத்மா இவைகஊக் காட்டிலும் வேறுதான். ஆகவே பிராணனும் ஆத்மாவலல மனமும் ஆத்மாவல்ல.

**(அவதாரிகை)** புத்தி ஆத்மாவல்ல என்பதை இரு சுலோகங்களால் கூறுகிறுர்:-

**सुप्तौ लीनास्ति या बोधे सर्वं व्याप्नोति देहकम् ।**
**चिच्छायया च सम्बद्धा न सा बुद्धिर्भवान्द्विज ॥ ११ ॥**

**ஸுப்தௌ லீனுஸ்தி யா போ³தே⁴ ஸர்வம் வ்யாப்னேதி தே³ஹகம் ।**
**சிச்சா²யயா ச ஸம்ப³த்³தா⁴ ந ஸா பு³த்³தி⁴ர்ப⁴வாந்த்³விஜ ॥ 11 ॥**

**नानारूपवती बोधे सुप्तौ लीनातिचञ्चला ।**
**यतो दृगेकरूपस्त्वं पृथक्तस्य प्रकाशकः ॥ १२ ॥**

**நானுரூபவதீ போ³தே⁴ ஸுப்தௌ லீனுதிசஞ்சலா ।**
**யதோ த்³ருகே³கரூபஸ்த்வம் ப்ருத²க்தஸ்ய ப்ரகாஶக꞉ ॥ 12 ॥**

| | | |
|---|---|---|
| **द्विज** <br> **த்³விஜ** | = | ஹே த்விஜரே! |
| **या** <br> **யா** | = | எது, |
| **सुप्तौ** <br> **ஸுப்தௌ** | = | தூக்கத்தில், |
| **लीना अस्ति** <br> **லீனு அஸ்தி** | = | அடங்கியிருக்கிறதோ, |
| **बोधे** <br> **போ³தே⁴** | = | விழித்திருக்கும்பொழுது, |
| **चिच्छायया** <br> **சிச்சா²யயா** | = | சைதன்யபிரதிபிம்பத்துடன், |
| **सम्बद्धा** <br> **ஸம்ப³த்³தா⁴** | = | சேர்ந்து கொண்டு, |
| **देहकं सर्वं** <br> **தே³ஹகம் ஸர்வம்** | = | சரீரம் முழுவதிலும், |

| | | |
|---|---|---|
| **व्याप्नोति**<br>**வ்யாப்னோதி** | = | பரவியிருக்கிறதோ, |
| **सा बुद्धिश्व**<br>**ஸா பு³த்³தி⁴ஶ்வ** | = | அந்த புத்தியும், |
| **न भवान्**<br>**ந ப⁴வான்** | = | இல்லை. |

(புத்தியானது)

| | | |
|---|---|---|
| **बोधे**<br>**போ³தே⁴** | = | விழித்துக்கொண்டிருக்கும் பொழுது, |
| **नानारूपवती**<br>**நானாரூபவதீ** | = | பலவித உருவ (ஆகார)த்துடன் கூடியதாகவும், |
| **अतिचञ्चला**<br>**அதிசஞ்சலா** | = | மிகவும் சஞ்சலமானதாகவும், |
| **सुप्तौ**<br>**ஸுப்தௌ** | = | தூக்கத்தில், |
| **लीना**<br>**லீனா** | = | மறைந்ததாகவும் இருக்கிறது, |
| **यत:**<br>**யத:** | = | எந்தக்காரணத்தினால், |
| **त्वं**<br>**த்வம்** | = | ஞானம் ஒன்றையே ஸ்வரூபமாகக் கொண்டவன் (ஆனதால்), |
| **तस्य**<br>**தஸ்ய** | = | அந்த புத்தியை, |
| **प्रकाशक:**<br>**ப்ரகாஶக:** | = | பிரகாசப்படுத்துகிற (நீ), |
| **पृथक्**<br>**ப்ருத²க்** | = | (அந்த புத்தியைக் காட்டிலும்) வேறானவன். |

நாம் விழித்துக்கொண்டிருக்கும் பொழுது பல விஷயங்களைத் தெரிந்து கொள்கிறோம். இதற்கு புத்தி தான் காரணம். வெளியில் உள்ள விஷயங்களை கண், காது முதலான இந்திரியங்கள் மூலம் புத்தியால் அறிந்து கொள்கிறோம். உள்ளே ஏற்படும் ஸுகம், துக்கம் முதலியவைகளை புத்தியால் மட்டும் அறிந்து கொள்கிறோம். புத்தியானது சரீரம் முழுவதும் பரவியிருக்கிறது சரீரத்தில் எந்த இடத்தில் வலி ஏற்பட்டாலும் புத்திக்குத் தெரிந்து விடுகிறது. கண்ணால் கோவிலில் உள்ள தேவதா மூர்த்தியைப் பார்க்கும்பொழுது புத்தியும் அந்த உருவமாக ஆகிவிடு கிறது. இதற்கு புத்தி விருத்தி என்று பெயர். இதில் சைதன்யம் பிரதிபிம்பிக்கிறது. உடனே நமக்கு அந்த விஷயத்தின் அறிவு ஏற்படுகிறது. புத்தி ஜடமாயிருந்தாலும்

ப்ரகாசமான சைதன்ய பிரதிபிம்பத்துடன் கூடியிருப்பதால் அறியும் சக்தி அதற்கு ஏற்படுகிறது தூக்கத்திலோ நமக்கு ஒன்றும் தெரிவதில்லை. அப்பொழுது புத்தி மறைந்துவிடுகிறது. இவ்வாறு தான் ஜடமாயும் வேறொரு பிரகாச வஸ்துவின் உதவியைக்கொண்டு பிரகாசிக்கிறதாயும், பலவித மாறுபாடுகளை அடைகிறதாயும், ஒரு சமயத்தில் மறைந்தே போவதாயும் உள்ள புத்தி எவ்வாறு ஆத்மாவாக இருக்கமுடியும்? மேலும் மற்றவைகளைப் பிரகாசப்படுத்தும் புத்தியை பிரகாசப் படுத்துபவன் ஆத்மா. அவன் ஸ்வரூபமே ஞானம்தான். ஆதலால் புத்தி பிரகாசக ஞன ஆத்மா புத்தியைக்காட்டிலும் வேறு. **(11-12)**

**(அவதாரிகை)** ஆத்மா ஞானஸ்வரூபி என்பதை விவரிக்கிறார்: -

## सुप्तौ देहाद्यभावेऽपि साक्षी तेषां भवान् यतः ।
## स्वानुभूतिस्वरूपत्वात् नान्यस्तस्यास्ति भासकः ॥ १३ ॥

**ஸுப்தௌ தே³ஹாத்³யபா⁴வே(அ)பி ஸாக்ஷீ தேஷாம் ப⁴வான் யத꞉ ।**
**ஸ்வானுபூ⁴திஸ்வரூபத்வாத் நான்யஸ்தஸ்யாஸ்தி பா⁴ஸக꞉ ॥ 13 ॥**

| | | |
|---|---|---|
| **सुप्तौ** **ஸுப்தௌ** | = | தூக்கத்தில், |
| **देहाद्यभावेऽपि** **தே³ஹாத்³யபா⁴வே(அ)பி** | = | தேஹம் முதலியவைகள் இல்லாமல் போனாலும், |
| **यतः** **யத꞉** | = | எந்தக்காரணத்தால், |
| **तेषां** **தேஷாம்** | = | அவைகளை, |
| **साक्षी** **ஸாக்ஷீ** | = | அறிகிறவனாக, |
| **भवान्** **ப⁴வான்** | = | நீ (இருக்கிறாயோ, அதனால்) |
| **स्वानुभूतिस्वरूपत्वात्** **ஸ்வானுபூ⁴திஸ்வரூபத்வாத்** | = | ஸ்வானுபவ ரூபமாக இருப்பதால், |
| **तस्य** **தஸ்ய** | = | அந்த ஆத்மாவை, |
| **भासकः** **பா⁴ஸக꞉** | = | விளங்கச் செய்கிற, |
| **अन्यः** **அன்ய꞉** | = | வேறுவஸ்து, |
| **नास्ति** **நாஸ்தி** | = | இல்லை. |

எப்பொழுதும் இருக்கும் வஸ்துதான் ஆத்மா தூக்கத்தில் தேஹமோ, இந்திரியமோ ஒன்றும் தெரியவில்லை. ஒரு ஸமயம் விளங்கி, மற்றோர் சமயம் மறைந்து போகும் தேஹம் முதலியவை ஆத்மாவல்ல. அந்தத் தூக்கத்திலும் ஓர் அனுபவம் நமக்கு ஏற்படுகிறது. அதுதான் ஆத்மா. அது ஞானஸ்வரூபமானதால் ஸூரியன் போல் தானே தான் பிரகாசிக்கிறது. அது வேறு ஒன்றாலும் பிரகாசிக்கப்படுவதில்லை. அதை பிரகாசப்படுத்தும் பொருள் வேறு ஒன்றும் உலகில் இல்லை. விழிப்பில தேஹம் முதலியவற்றை அது தான் விளங்கச் செய்கிறது. ஆகையால் அது தேஹம் முதலியவற்றைக்காட்டிலும் வேறானது. **(13)**

**प्रमाणं बोधयन्तं तं बोधं मानेन ये जनाः ।**
**बुभुत्सन्ते त एधोभिर्दग्धुं वाञ्छन्ति पावकम् ॥ १४ ॥**

**ப்ரமாணம் போ³த⁴யந்தம் தம் போ³த⁴ம் மானேன யே ஜனா꞉ ।**
**பு³பு⁴த்ஸந்தே த ஏதோ⁴பி⁴ர்த³க்³து⁴ம் வாஞ்ச²ந்தி பாவகம் ॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| **प्रमाणं** ப்ரமாணம் | = | அறிவிற்கு ஸாதனமான இந்திரியம் முதலியவற்றை, |
| **बोधयन्तं** போ³த⁴யந்தம் | = | அறிவுறுத்துகின்ற, |
| **तं बोधं** தம் போ³த⁴ம் | = | அந்த அறிவை, |
| **मानेन** மானேன | = | பிரமாணத்தால், |
| **ये जनाः** யே ஜனா꞉ | = | எந்த மனிதர்கள், |
| **बुभुत्सन्ते** பு³பு⁴த்ஸந்தே | = | அறிய விரும்புகிறார்களோ, |
| **ते** தே | = | அவர்கள், |
| **एधोभिः** ஏதோ⁴பி⁴ | = | விறகுகளால், |
| **पावकं** பாவகம் | = | நெருப்பை, |
| **दग्धुं** த³க்³து⁴ம் | = | எரிப்பதற்கு, |
| **वाञ्छन्ति** வாஞ்ச²ந்தி | = | விரும்புகிறார்கள். |

உலகிலுள்ள விஷயங்களை இந்திரியம், மனம் முதலான பிரமாணங்களால் அறிந்துகொள்கிறோம், இந்த பிரமாணங்களை அறியப்படுத்துகிறது ஞானரூபமான ஆத்மா. இவ்விதமிருக்க இந்த பிரமாணங்களைக்கொண்டு ஆத்மாவை எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்? அக்னியால் விறகை எரிக்கலாம். விறகால் நெருப்பை எரிக்கமுடியுமா? இந்திரியம், மனம் முதலியவற்றால் ஆத்மாவை அறிவது என்பது விறகால் நெருப்பை எரிப்பது போலத்தான். ஆகையால் இந்திரியம் முதலியவற்றை க்காட்டிலும் ஆத்மா வேறு வஸ்து. **(14)**

## विश्वमात्मानुभवति तेनासौ नानुभूयते ।
## विश्वं प्रकाशयत्यात्मा तेनासौ न प्रकाश्यते ॥ १५ ॥

**விஶ்வமாத்மானுப⁴வதி தேனாஸௌ நானுபூ⁴யதே ।**
**விஶ்வம் ப்ரகாஶயத்யாத்மா தேனாஸௌ ந ப்ரகாஶ்யதே ॥ 15 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मा** **ஆத்மா** | = | ஆத்மாவானது, |
| **विश्वं** **விஶ்வம்** | = | உலகத்தை, |
| **अनुभवति** **அனுப⁴வதி** | = | அனுபவிக்கிறது, |
| **तेन:** **தேன:** | = | அந்த பிரபஞ்சத்தால், |
| **असौ** **அஸௌ** | = | அந்த ஆத்மா, |
| **नानुभूयते** **நானுபூ⁴யதே** | = | அனுபவிக்கப்படுகிறதில்லை, |
| **आत्मा** **ஆத்மா** | = | ஆத்மாவானது, |
| **विश्वं** **விஶ்வம்** | = | பிரபஞ்சத்தை, |
| **प्रकाशयति** **ப்ரகாஶயதி** | = | விளங்கவைக்கிறது, |
| **तेन:** **தேன:** | = | அந்த பிரபஞ்சத்தால், |
| **असौ** **அஸௌ** | = | அந்த ஆத்மா, |
| **न प्रकाश्यते** **ந ப்ரகாஶ்யதே** | = | பிரகாசிக்கப்படுவதில்லை. |

உலகம் முழுவதையும் விளங்கச்செய்கிறது ஆத்மா தான். எல்லாவற்றையும் அனுபவிக்கிறதும் ஆத்மாதான். இந்த ஆத்மாவை உலகிலுள்ள பொருள்களால் அனுபவிக்கவோ பிரகாசப்படுத்தவோ முடியாது. ஆகவே உலகில் உள்ள எல்லாப் பொருள்களையும்விட ஆத்மா வேறு **(15)**

**(அவதாரிகை)** இவ்வாறு பல சுலோகங்களால் ஆத்மாவை தேஹம் முதலிய வற்றைக் காட்டிலும பிரித்து வேருகக்காட்டி நீயே ப்ரஹ்மம் என்று உபதேசிக்கிருர்:-

**ईदृशं तादृशं नैतत्न परोक्षं सदेव यत् ।**
**तद्ब्रह्म त्वं न देहादिदृश्यरूपोऽसि सर्वदृक् ॥ १६॥**

**ஈத்³ருஶம் தாத்³ருஶம் நைதத்ன பரோக்ஷம் ஸதே³வ யத் ।**
**தத்³ப்³ரஹ்ம த்வம் ந தே³ஹாதி³த்³ருஶ்யரூபோ(அ)ஸி ஸர்வத்³ருக் ॥ 16॥**

| | | |
|---|---|---|
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **ईदृशं**<br>**ஈத்³ருஶம்** | = | இப்பேற்பட்டதாகவும், |
| **तादृशं**<br>**தாத்³ருஶம்** | = | அப்பேற்பட்டதாகவும், |
| **एतत्**<br>**ஏதத்** | = | இதுவாகவும், |
| **न**<br>**ந** | = | இல்லையோ, |
| **न परोक्षं**<br>**ந பரோக்ஷம்** | = | பரோக்ஷமாகவும் இல்லையோ, |
| **सदेव**<br>**ஸதே³வ** | = | முக்காலத்திலும் அழியாததாகவே இருக்கிறதோ, |
| **तत्**<br>**தத்** | = | அந்த, |
| **ब्रह्म**<br>**ப்³ரஹ்ம** | = | ப்ரஹமம்தான், |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **सर्वदृक्**<br>**ஸர்வத்³ருக்** | = | எல்லாவற்றையும் அறியும் நீ, |
| **देहादिदृश्यरूपः**<br>**தே³ஹாதி³த்³ருஶ்யரூப:** | = | சரீரம் முதலிய அறியப்படும் பொருளாக, |

| | | |
|---|---|---|
| **नासि**<br>**நாஸி** | = | இருக்கவில்லை. |

ப்ரஹ்மம் ஸத்வஸ்து. அதாவது முக்காலத்திலும் அழியாதது. அதில் தாமங்கள் ஒன்றும் இல்லாததால் அதை இவ்விதமானது என்றோ அவ்விதமான தென்றோ சப்தங்களால் கூறமுடியாது. ஜாதி, குணம், க்ரியை ஏதாவது தர்மம் இருந்தால்தான் இப்பேற்பட்டது என்றோ அப்பேற்பட்டது என்றோ கூறமுடியும். எல்லாவற்றையும் அறியும் நீ அந்த ப்ரஹ்மஸ்வரூபம் தான். நீயே பரப்ரஹ்மம், நீ எல்லாவற்றையும் அறிகின்றபடியால் உன்னல் அறியப்படும் தேஹாதிகள் நீ அல்ல. அறிகிறவன் அறியப்படும் பொருளாக ஆகமுடியாது நீ அறிபவன், தேஹாதிகள் அறியப்படும் வஸ்து. ப்ரஹ்மம் ஆத்மஸ்வரூபமாக ப்ரகாசிப்பதால் அதை இது என்றும் கூறமுடியாது. அது நேரில் காணமுடியாததும் அல்ல. தன்னைக்காட்டிலும் வேறுன பொருளைத்தான் இது என்று கூறலாம். அதுதான் பரோக்ஷமாகவும் இருக்கும் ப்ரஹமம் பரோக்ஷம் அல்ல. **(16)**

**(அவதாரிகை)** ப்ரஹ்மம் ஆத்மா என்பதறகு யுக்தியைக் காட்டுகிறுர்: -

**इदंवेनैव यद्भाति सर्वं तच्च निषिध्यते ।**
**अवाच्यतत्वमनिदं न वेद्यं स्वप्रकाशतः ॥ १७ ॥**

**இத³ம்வேனைவ யத்³பா⁴தி ஸர்வம் தச்ச நிஷித்⁴யதே ।**
**அவாச்யதத்வமனித³ம் ந வேத்³யம் ஸ்வப்ரகாஶத꞉ ॥ 17 ॥**

| | | |
|---|---|---|
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **इदंवेनैव**<br>**இத³ம்வேனைவ** | = | இது என்றே, |
| **भाति**<br>**பா⁴தி** | = | தோன்றுகிறதோ, |
| **तच्च सर्वं**<br>**தச்ச ஸர்வம்** | = | அது எல்லாம், |
| **निषिध्यते**<br>**நிஷித்⁴யதே** | = | (ப்ரஹ்மம் அல்ல என்று)<br>மறுக்கப்படுகிறது, |
| **अनिदं**<br>**அனித³ம்** | = | இதுவல்லாத ஆத்மா, |
| **अवाच्यतत्वं**<br>**அவாச்யதத்வம்** | = | சப்தத்தால் சொல்லமுடியாத<br>உண்மைப்பொருள், |
| **स्वप्रकाशतः**<br>**ஸ்வப்ரகாஶத꞉** | = | (அது) தானகவே ப்ரகாசிப்பதால், |

**न वेद्यं** = அறியப்படும் பொருள் அல்ல.

**ந வேத்³யம்**

உபநிஷத்துக்களில் **(अशब्दं अस्पर्श, नेति नेति) (அஶப்³த³ம் அஸ்பர்ஶ, நேதி நேதி)** முதலான வாக்யங்கள் காணப்படுகின்றன. இது, இது என்று கூறப்படும் பொருள்கள் எல்லாம் ப்ரஹ்மம் அல்ல என்பது இந்த வாக்யங்களின் கருத்து. தன்னைத் தவிற வேறான எல்லாப் பொருள்களையும் இது என்றே கூறுகிறோம். அவைகள் ப்ரஹ்மம் அல்ல என்று கூறுவதாலதான் (ஆத்மா) தான் ப்ரஹ்மம் என்று கிடைக்கிறது. மேலும் அது ஸ்வப்ரகாசமானதால் அறியப்படும் பொருள் அல்ல. அதனாலும் அது ஆத்மாதான். ஆகவே சப்தத்தால் சொல்லமுடியாத உண்மைப் பொருளான ப்ரஹ்மம் ஆத்மாதான். **(17)**

**(அவதாரிகை)** இரண்டிலும் ஒரேமாதிரி லக்ஷணமிருப்பதாலும் தத்வம் ஒன்றுதானெனக் கூறுகிறார்: -

**सत्यं ज्ञानमनन्तं च ब्रह्मलक्षणमुच्यते ।**
**सत्यत्यात् ज्ञानरूपत्वात् अनन्तत्वात्वमेव हि ॥ १८ ॥**

**ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ச ப்³ரஹ்மலக்ஷணமுச்யதே ।**
**ஸத்யத்யாத் ஜ்ஞானரூபத்வாத் அனந்தத்வாத்வமேவ ஹி ॥ 18 ॥**

**सत्यं** = ஸத்யம்,

**ஸத்யம்**

**ज्ञानं** = ஞானம்,

**ஜ்ஞானம்**

**अनन्तं च** = எல்லையில்லாதது (இம்மூன்றும்),

**அனந்தம் ச**

**ब्रह्मलक्षणं** = ப்ரஹ்மத்தின் லக்ஷணமாக,

**ப்³ரஹ்மலக்ஷணம்**

**उच्यते** = சொல்லப்படுகிறது,

**உச்யதே**

**सत्यत्यात्** = ஸத்யமாயிருப்பதாலும்,

**ஸத்யத்யாத்**

**ज्ञानरूपत्वात्** = ஞான ரூபமாயிருப்பதாலும்,

**ஜ்ஞானரூபத்வாத்**

**अनन्तत्वात्** = எல்லையற்று இருப்பதாலும்,

**அனந்தத்வாத்**

**त्वमेव** = நீதான் (அந்த ப்ரஹ்மம்).

**த்வமேவ**

தைத்திரீய உபநிஷத்தில் **'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म'** (**'ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்³ரஹ்ம'** - ஆனந்தவல்லி) என்ற வாக்யம் ப்ரஹ்மத்தின் லக்ஷணத்தைக் கூறுகிறது. இதில் 'ஸத்யம், ஞானம், அநந்தம்' இம் மூன்றும் ப்ரஹ்ம லக்ஷணங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன. முக்காலத்திலும் நாசம் அடையாத வஸ்து ப்ரஹ்மம். சைதன்ய ஸ்வரூபமாயிருப்பது ப்ரஹ்மம். அந்தம் அதாவது பரிச்சேதம் (வரையறை) இல்லாதது ப்ரஹ்மம். உலகில் எல்லாப் பொருள்களும் ஏதாவது ஒரு ஸமயம் அழிந்து போகும் தன்மையுள்ளது. இது காலத்தால் பரிச்சேதம். அதாவது ஒரு காலத்தில் இருந்து மற்றேர் ஸமயம் இல்லாமல் போய்விடுகிறது. ஒரு இடத்தில் இருக்கும் பொருள் மற்றேர் இடத்தில் இல்லை. இது தேசபரிச்சேதம். ஒரு பொருள் வேறெரு பொருளாக இருப்பதில்லை. அதாவது குடம் வஸ்திரமாக இருப்பதில்லை இதுவஸ்து பரிச்சேதம். உலகில் எல்லாப் பொருள்களும் ஒரு காலத்தில் மட்டும் இருப்பதாலும், ஒரு இடத்தில மட்டும் இருப்பதாலும் ஒரு பொருளாகமட்டும் இருப்பதாலும் மூன்று விதமான பரிச்சேதங்களும் எல்லாவற்றிற்கும் உண்டு ப்ரஹ்மமோ எல்லாக் காலங்களிலும், எல்லா தேசங்களிலும், எல்லா வஸ்துவாக வும் இருப்பதால் மூன்று பரிச்சேதங்களும் அதற்குக் கிடையாது ஆகையால் அது அனந்தம். இம் மூன்று லக்ஷணங்களும் உன்னிடமும் இருக்கின்றன. சரீரம் முதலிய வைகளைக் காட்டிலும் வேறன உனக்கு நாசமே கிடையாது. ஆதலால் நீ ஸத்ய வஸ்து. நீ ஜடம் அல்ல சைதன்ய ஸ்வரூபி. உனக்கு அந்தம் (தேச - கால - வஸ்து பரிச்சேதங்கள்) இல்லை. ஆகையால் நீ அனந்தம். வெவ்வேறன லக்ஷணங்க ளைக்கொண்டுதான் வஸ்துக்களின் வேற்றுமையைத் தீர்மானிக்கிறேம். ஜீவ ஸ்வரூபத்திலும் ப்ரஹ்ம ஸ்வரூபத்திலும் ஒரேமாதிரியான லக்ஷணங்கள் இருப்பதால் இரண்டும் ஒன்றுதான். **(18)**

**(அவதாரிகை)** ஜீவ - ஈசவரர்களின் உபாதிகளைக் காட்டுகிறர்: -

## सति देहाद्युपाधौ स्याज्जीवस्तस्य नियामकः ।
## ईश्वरः शक्त्युपाधित्वाद्द्वयोर्बाधे स्वयम्प्रभः ॥ १९ ॥

**ஸதி தே³ஹாத்³யுபாதௌ⁴ ஸ்யாஜ்ஜீவஸ்தஸ்ய நியாமகः ।**
**ஈஶ்வரः ஶக்த்யுபாதி⁴த்வாத்³வயோர்வாதே⁴ ஸ்வயம்ப்ரப⁴ः ॥ 19 ॥**

**देहाद्युपाधौ सति** = சரீரம் முதலிய உபாதி இருக்கும்பொழுது,
**தே³ஹாத்³யுபாதௌ⁴ ஸதி**

**जीवः** = ஜீவன்,
**ஜீவः**

**तस्य** = அதற்கு,
**தஸ்ய**

**नियामकः** = அடக்கி ஆள்பவனுக,
**நியாமகः**

| | | |
|---|---|---|
| **स्यात्** | = | ஆவான், |
| **ஸ்யாத்** | | |
| **शक्त्युपाधित्वात्** | = | மாயா சக்தியை உபாதியாகக |
| **ஶக்த்யுபாதி⁴த்வாத்** | | கொண்டிருப்பதால், |
| **ईश्वरः** | = | ஈசுவரன் (அதற்கு நியாமகன்). |
| **ஈஶ்வரः** | | |
| **द्वयोर्वाधे** | = | இரண்டு உபாதிகளையும் |
| **த்³வயோர்வாதே⁴** | | விலக்கிவிட்டால், |
| **स्वयम्प्रभः** | = | தானே பிரகாசிக்கும் சைதன்யம் |
| **ஸ்வயம்ப்ரப⁴:** | | ஒன்று தான் மிஞ்சிநிற்கும். |

ஜீவனுக்கு தேஹம் முதலியவை உபாதி. ஈசுவரனுக்கு மாயை உபாதி. அகண்டமான வஸ்துவைத் தனியாகப் பிரித்துக்காட்டும் பொருளுக்கு உபாதி என்று பெயர். ஆகாசம் அகண்டமான ஒரே வஸ்து. ஆனாலும் குடத்திலுள்ள ஆகாசம் வேறாகவும், செம்பிலுள்ள ஆகாசம் வேறாகவும், தெரிகிறது. இங்கு ஆகாசத்தைப் பிரித்துக் காட்டும் குடம், செமபு முதலியவை உபாதிகள். இதுபோல சைதன்யம் ஒன்றாக இருந்தாலும் தேஹாதிகளும், மாயையும் பிரித்துக் காட்டுகின்றன தேஹாதி களுடன் கலந்த சைதன்யத்துக்கு ஜீவன் என்று பெயர். மாயையுடன் சேர்ந்த சைதன்யத்திற்கு ஈசுவரன் என்று பெயா. இரண்டிலும் ஒரே சைதன்யம் இருந்தாலும் உபாதி வெவ்வேறாக இருப்பதால் தன்னை ஈசுவரனைக் காட்டிலும் வேறாக எண்ணு கிறோம் இது மட்டுமல்ல, தேஹமென்னும் உபாதி பலவாக இருப்பதால் ஜீவர்களும் அநேகர் என்று நினைக்கிறோம். இது ப்ராந்தி.உபாதிகளின் ஸம்பந்தம் இருக்கும் வரை தான் இநத ப்ராந்தி இருக்கும். குடமும் சொம்பும் இருக்கும் வரை ஆகாசமும தனித்துக் காணப்படும். இவ்விரண்டும் மறைந்துவிட்டால் அங்கு ஆகாசம் இருந்தாலும் வேற்றுமை தெரியாது. இதுபோல தத்வஞானத்தால் தேஹாதிகள், மாயை என்னும் உபாதிகள் மறைந்து விட்டால் பிறகு ஜீவன், ஈசுவரன் என்ற வேற்றுமை தெரியாது. ஸ்வயம் ப்ரகாசமான சைதன்யம் ஒன்றுதான் தெரியும். **(19)**

**(அவதாரிகை)** உபாதிகளை விலக்கும் தத்வஞானத்தைக் கொடுக்கும் ப்ரமாணத்தைக் காட்டுகிறார்: -

## अपेक्ष्यतेऽखिलैर्मानैर्न यन्मानमपेक्षते ।
## वेदवाक्यं प्रमाणं तद्ब्रह्मात्मावगतौ मतम् ॥ २० ॥

**அபேக்ஷ்யதே(அ)கி²லைர்மானைர்ன யன்மானமபேக்ஷதே ।**
**வேத³வாக்யம் ப்ரமாணம் தத்³ப்³ரஹ்மாத்மாவக³தௌ மதம் ॥ 20 ॥**

| | | |
|---|---|---|
| **अखिलै मानैः** | = | எல்லா பிரமாணங்களாலும், |
| **அகி²லை மானை:** | | |

| | | |
|---|---|---|
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **अपेक्ष्यते**<br>**அபேக்ஷ்யதே** | = | எதிர்பார்க்கப்படுகிறதோ, |
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **मानं**<br>**மானம்** | = | வேறு ப்ரமாணத்தை, |
| **न अपेक्ष्यते**<br>**ந அபேக்ஷ்யதே** | = | எதிர்பார்க்கிறதில்ஜலயோ, |
| **तत्**<br>**தத்** | = | அந்த, |
| **वेदवाक्यं**<br>**வேத³வாக்யம்** | = | உபநிஷத் வாக்யம், |
| **ब्रह्मात्मावगतौ**<br>**ப்³ரஹ்மாத்மாவக³தெள** | = | ப்ரஹ்மத்தை ஆத்மாவாக நேரில் தெரிந்து கொள்வதில், |
| **प्रमाणं**<br>**ப்ரமாணம்** | = | ப்ரமாணமாக, |
| **मतम्**<br>**மதம்** | = | ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது |

ப்ரத்யக்ஷம், அனுமானம், முதலிய ப்ரமாணங்கள் எல்லாம் வேதத்தை அனுஸரித்துத்தான் ப்ரமாணமாகும். வேதத்திற்கு விருத்தமாயிருந்தால் அவை ப்ரமாணம் அல்ல. புருஷர்களின் இந்திரியங்களிலும் புத்தியிலும் பலவித தோஷம் ஸம்பவிக்கக்கூடுமாதலால் ப்ரத்யக்ஷம் முதலியவை தாமாக ப்ரமாணமாகாது. அபௌருஷேயமான வேதத்தில் ஒரு தோஷமும் ஏற்பட இடமில்லாததால் அது தானுகவே ப்ரமாணமாகிறது இந்த வேதத்தை ஒட்டித்தான் மற்றவை ப்ரமாணமாகின்றன. இவ்வாறு ஸ்வத: ப்ரமாணமான சிறந்த வேத வாக்யத்தால ப்ரஹ்மாத்மைக்யாநுபவம் ஏற்படுகிறது. 'அவகதி' என்ற பதத்திற்கு ஸாக்ஷாத்காரம் என்று பொருள். உபநிஷத் வாக்யத்தால் ஜீவ ப்ரஹ்மைக்ய ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது.

**(20)**

## अतो हि तत्त्वमस्यादिवेदवाक्यं प्रमाणतः ।
## ब्रह्मणोऽस्ति यया युक्त्या सास्माभिः सम्प्रकीर्त्यते ॥ २१ ॥

**அதோ ஹி தத்த்வமஸ்யாதி³வேத³வாக்யம் ப்ரமாணத: ।**
**ப்³ரஹ்மணோ(அ)ஸ்தி யயா யுக்த்யா ஸாஸ்மாபி⁴: ஸம்ப்ரகீர்த்யதே ॥ 21 ॥**

| | | |
|---|---|---|
| **अत:**<br>**அத:** | = | ஆகையால், |

| | | |
|---|---|---|
| **यया** | = | எந்த, |
| **யயா** | | |
| **युक्त्या** | = | யுக்தியினுல், |
| **யுக்த்யா** | | |
| **तत्त्वमस्यादिवेदवाक्यं** | = | 'தத்வமஸி' முதலானவேதவாக்யம், |
| **தத்த்வமஸ்யாதி³வேத³வாக்யம்** | | |
| **ब्रह्मण:** | = | ப்ரஹ்மத்திற்கு, |
| **ப்³ரஹ்மண:** | | |
| **प्रमाणत:** | = | ப்ரமாணமாக, |
| **ப்ரமாணத:** | | |
| **अस्ति** | = | இருக்கிறதோ, |
| **அஸ்தி** | | |
| **सा** | = | அந்த யுக்தி, |
| **ஸா** | | |
| **अस्माभि:** | = | எங்களால், |
| **அஸ்மாபி⁴:** | | |
| **सम्प्रकीर्त्यते** | = | நன்கு சொல்லப்படுகிறது. |
| **ஸம்ப்ரகீர்த்யதே** | | |

'தத்த்வமஸி' முதலான உபநிஷத் வாக்யத்திஞல் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படுவதாகக் கூறப்பட்டது. ஆஞல் இந்த வாக்யத்தைக் கேட்பதால் மட்டும் ஒருவருக்கும் இந்த அனுபவம் ஏற்படுவதில்லை. அதஞல் இந்த வாக்யத்திலிருந்து ஆத்மானுபவம் ஏற்படுவதற்கு வேண்டிய உபாயத்தை மேல ஸுலோகங்களில் காட்டுகிருர். **(21)**

**शोधिते त्वम्पदार्थे हि तत्त्वमस्यादि चिन्तितम् ।**
**सम्भवेन्नान्यथा तस्माच्छोधनं कृतमादितः ॥ २२ ॥**

**ஶோதி⁴தே த்வம்பதா³ர்தே² ஹி தத்த்வமஸ்யாதி³ சிந்திதம் ।**
**ஸம்ப⁴வேன்னான்யதா² தஸ்மாச்சோ²த⁴னம் க்ருதமாதி³த: ॥ 22 ॥**

| | | |
|---|---|---|
| **त्वम्पदार्थे** | = | 'த்வம்' என்ற சொல்லின் பொருள், |
| **த்வம்பதா³ர்தே²** | | |
| **शोधिते हि** | = | சோதனம் செய்யப்பட்ட பொழுதல்லவா, |
| ஶோதி⁴தே ஹி | | |
| **तत्त्वमस्यादि** | = | 'தத்வமஸி' முதலான வாக்யம், |
| **தத்த்வமஸ்யாதி³** | | |

| | | |
|---|---|---|
| **चिन्तितम्** | = | ஆராயப்பட்டதாக, |
| **சிந்திதம்** | | |
| **सम्भवेत्** | = | ஆகும். |
| **ஸம்ப4வேத்** | | |
| **अन्यथा** | = | அப்படியில்லாவிடில், |
| **அன்யதா2** | | |
| **न** | = | ஆகாது, |
| **ந** | | |
| **तस्मात्** | = | ஆகையால், |
| **தஸ்மாத்** | | |
| **आदितः** | = | முதலில், |
| **ஆதி3த:** | | |
| **शोधनं कृतं** | = | சோதனம் செய்யப்பட்டது. |
| **ஶோத4னம் க்ருதம்** | | |

'தத்தவமஸி' என்ற வாக்யத்தின் கருத்தை நன்கு ஆராய்ந்து பார்ப்பதுதான் அந்த வாக்யத்திலிருந்து ஆத்மானுபவம் ஏற்படுவதற்கு உபாயம். வாக்யத்தின் கருத்தை ஆராய்வதற்கு, முதலில அதிலுள்ள பதங்களின் பொருஊச் சோதித்துத் தெரிந்துகொள்ளவேண்டும். ஆகையால் முதலில் பதாரத்தசோதமை செய்யப்படுகிறது. உண்மையில் அந்த ஸ்வரூபத்தில் சேராத அம்சங்கஊ விலக்கி சுத்தமாகத் தெரிந்துகொள்வதுதான் சோதனம்.

(**அவதாரிகை**) த்வம்பதத்தின் வாச்யார்த்தத்தை காட்டுகிறார்: -

**देहेन्द्रियादिधर्मान् यः स्वात्मन्यारोपयन् मृषा ।**
**कर्तुत्वाद्यभिमानी च वाच्यार्थस्त्वंपदस्य सः ॥ २३ ॥**

**தே3ஹேந்த்3ரியாதி3த4ர்மான் ய: ஸ்வாத்மன்யாரோபயன் ம்ருஷா ।**
**கர்துத்வாத்3யபி4மானீ ச வாச்யார்த2ஸ்த்வம்பத3ஸ்ய ஸ: ॥ 23 ॥**

| | | |
|---|---|---|
| **यः** | = | எவன், |
| **ய:** | | |
| **स्वात्मनि** | = | தன்ஸ்வரூபத்தில், |
| **ஸ்வாத்மனி** | | |
| **देहेन्द्रियादिधर्मान्** | = | தேஹம், இந்திரியம் முதலியவற்றின் |
| **தே3ஹேந்த்3ரியாதி3த4ர்மான்** | | தர்மங்கஊ, |
| **मृषा** | = | பொய்யாக, |
| **ம்ருஷா** | | |

| | | |
|---|---|---|
| **आरोपयन्**<br>**ஆரோபயன்** | = | ஆரோபணம் செய்துகொண்டு, |
| **कर्तुत्वाद्यभिमानी च**<br>**கர்துத்வாத்³யபி⁴மானீ ச** | = | கர்த்ருத்வம் முதலியவை இருப்பதாக அபிமானம் கொள்கிறுனே, |
| **सः**<br>**ஸः** | = | அவன், |
| **त्वंपदस्य**<br>**த்வம்பத³ஸ்ய** | = | த்வம்பதத்திற்கு, |
| **वाच्यार्थः**<br>**வாச்யார்த²:** | = | வாச்யமான பொருள். |

'தத்த்வமஸி' என்ற வாக்யம் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆறுவது அத்யாயத்தில் காணப்படுகிறது ஆருணி என்ற முனிவர் தம் குமாரனுன ச்வேதகேதுவுக்கு உபதேசிக்கும் வாக்யம் இது. இந்த வாக்யத்தில் **त्वं** (**த்வம்**) என்ற பதத்திற்கு நீ என்று பொருள். ச்வேதகேதுவைப் பார்த்துக் கூறுவதால் **त्वं** (**த்வம்**) என்பது ச்வேதகேதுவைக் குறிக்கும். மற்ற ஆசார்யர்களும் இந்த மஹா வாக்யத்தை உபதேசிக்கக் கூடுமாதலால் பொதுவாக த்வம் என்பது அக்ஞானியான ஜீவனைக் குறிக்கும். அந்த சரீரத்தில் இருந்து கொண்டு தேஹம், இந்திரியம் முதலியவற்றின் தர்மங்களை எல்லாம் ப்ரமத்தால தன்னிடம் இருப்பதாக எண்ணி நான் கருப்பு, சிவப்பு, பார்க்கிறேன் கேட்கிறேன் என்றெல்லாம் வியவஹாரம் செய்துகொண்டு தன்னைக் கர்த்தாவாகவும் ஸுகதுக்கங்களை அநுபவிப்பவனுகவும் நினைத்து சரீராதிகளில் அபிமானம் கொண்டுள்ள ஜீவாத்மாதான் 'த்வம்' பதத்தின் பொருள். 'த்வம்' என்ற சொல்லைக்கேட்டவுடன் இந்தப் பொருள் எல்லோருக்கும் விளங்குவதால் இதற்கு வாச்யார்த்தம் என்று பெயர். அதாவது உபாதிகளுடன் கலந்த சைதன்யம் தான் த்வம்பதவாச்யார்த்தம். **(23)**

(**அவதாரிகை**) த்வம்பத லார்த்தத்தைக் காட்டுகிறார்: -

**देहेन्द्रियादिसाक्षी यस्तेभ्यो भाति विलक्षणः ।**
**स्वयंबोधस्वरूपत्वाल्लक्ष्यार्थस्त्वंपदस्य सः ॥ २४ ॥**

**தே³ஹேந்த்³ரியாதி³ஸாக்ஷீ யஸ்தேப்⁴யோ பா⁴தி விலக்ஷணः ।**
**ஸ்வயம்போ³த⁴ஸ்வரூபத்வால்லக்ஷ்யார்த²ஸ்த்வம்பத³ஸ்ய ஸः ॥ 24 ॥**

| | | |
|---|---|---|
| **यः**<br>**யः** | = | எவன், |
| **स्वयंबोधस्वरूपत्वात्**<br>**ஸ்வயம்போ³த⁴ஸ்வரூபத்வாத்** | = | தான் ஞானஸ்வரூபமாக இருப்பதால், |

**देहेन्द्रियादिसाक्षी** = தேஹம், இந்திரியம் முதலியவைகளை
**தே3ஹேந்த்3ரியாதி3ஸாக்ஷீ** நேரில் அறிபவனாகவும்,
**तेभ्यः** = அவைகளைக்காட்டிலும்,
**தேப்4ய:**
**विलक्षणः** = வேறுபட்ட தன்மை உள்ளவனாகவும்,
**விலக்ஷண:**
**भाति** = விளங்குகிறானே,
**பா4தி**
**सः** = அவன்,
**ஸ:**
**त्वंपदस्य** = த்வம் என்ற சொல்லுக்கு,
**த்வம்பத3ஸ்ய**
**लक्ष्यार्थः** = லக்ஷணையினால் கிடைக்கும் பொருள்.
**லக்ஷ்யார்த2:**

தேஹம், இந்திரியம் முதலியவற்றைக காட்டிலும் வேறான ஞான ஸ்வரூபியான ஆத்மா த்வம்பதத்திலிருந்து லக்ஷணையினால் கிடைக்கும் பொருள். தேஹாதிகளின் ஸ்வபாவம் வேறு. இவனுடைய ஸ்வபாவம் வேறு. அவைகளுக்கும் இவனுக்கும் கொஞ்சமும் ஸம்பந்தம் கிடையாது. ஆனாலும் இவன் ஞான ஸ்வரூபனாக இருப்பதால் அவைகளுக்கு ஸாக்ஷியாக இருக்கிறான். வாதி பாதிவாதிகளின் காரியங்களிலோ அதனால் ஏற்படும் லாப நஷ்டங்களிலோ கொஞ்சமும் ஸம்பந்தப் படாமல் அவர்கள் செய்த காரியங்களைத் தெரிந்துகொண்டவனைத் தான் உலகில் ஸாக்ஷி என்கிறோம். இதுபோலவே தேஹாதிகள் செய்யும் காரியங்களிலோ, அதனால் ஏற்படும் ஸுக துக்கங்களிலோ ஆத்மாவுக்கு ஸம்பந்தம் கிடையாது. ஆனாலும் தேஹாதிகளையும் அவை செய்யும் காரியங்களையும் இவன் அறிந்து கொள்கிறான். இந்த ஸாக்ஷிதான் த்வம் பத லக்ஷ்யார்த்தம் லக்ஷணையைப் பற்றிய விபரம் பின்னால் காணலாம். **(24)**

**(அவதாரிகை)** [1] தத்பத லக்ஷ்யார்த்தத்தைக் கூறுகிறார்: -

[1] மஹாவாக்யத்தில் 'த்வம்' பதத்தின் வாச்யாரத்தத்தையும் லக்ஷ்யார்த்தத் தையும் கூறிவிட்டு 'தத்' பதத்தின் லக்ஷ்யாரத்தத்தைக் கூறுகிறார். க்ரமமாக இதற்கு முன்னால் ‘தத்’ பதத்தின் வாச்யாரத்தத்தைக் கூறவேண்டியது அவசியம். இதே ரீதியில் மஹாவாக்யார்தத விசாரம் **வாக்யவ்ருத்தி**, **ஸ்வாத்ம நிரூபணம்**, **ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம்** முதலான ப்ரகரணங்களிலும் காணப்படு கிறது. அங்கு தத்பதவாச்யார்த்தம் கூறப்பட்டிருக்கிறது.

**मायोपाधिर्जगद्योनिः सर्वज्ञत्वादिलक्षणः ।**
**पारोक्ष्यशबलः सत्याद्यात्मकस्तत्पदाभिधः ॥**

**மாயோபாதி⁴ர்ஜக³த்³யோனிः ஸர்வஜ்ஞுத்வாதி³லக்ஷணः ।**
**பாரோக்ஷ்யஶப³லः ஸத்யாத்³யாத்மகஸ்தத்பதா³பி⁴த⁴ः ॥**

(வாக்யவ்ருத்தி சு.45)

**बेदावसानवाचा संवेद्यं सकलजगदुपादानम् ।**
**सर्वज्ञताद्युपेतं चैतन्यं तत्पदस्य वाच्योर्थः ॥**

**பே³தா³வஸானவாசா ஸம்வேத்³யம் ஸகலஜக³து³பாதா³னம் ।**
**ஸர்வஜ்ஞுதாத்³யுபேதம் சைதன்யம் தத்பத³ஸ்ய வாச்யோர்த²ः ॥**

(ஸ்வாத்மநிரூபணம் சு.27)

மாயையுடன் சேர்ந்து பிரபஞ்சத்தை ஸிருஷ்டி செய்யும் ஸர்வக்ஞரான பரோக்ஷமான ஈசுவர சைதன்யம தத்பதத்தின் வாச்யார்த்தம். இதையே இங்கும் எடுத்துக்கொள்ளலாம்.

---

## वेदान्तवाक्यसंवेद्य विश्वातीताक्षराद्वयम् ।
## विशुद्धं यत् स्वसंवेद्यं लक्ष्यार्थस्तत्पदस्य सः ॥ २५ ॥

**வேதா³ந்தவாக்யஸம்வேத்³ய விஶ்வாதீதாக்ஷராத்³வயம் ।**
**விஶுத்³த⁴ம் யத் ஸ்வஸம்வேத்³யம் லக்ஷ்யார்த²ஸ்தத்பத³ஸ்ய ஸः ॥ 25 ॥**

| | | |
|---|---|---|
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **वेदान्तवाक्यसंवेद्य**<br>**வேதா³ந்தவாக்யஸம்வேத்³ய** | = | உபநிஷத்வாக்யங்களால் அறியத்தக்கதும், |
| **विश्वातीत**<br>**விஶ்வாதீத** | = | பிரபஞ்சத்திற்கு அப்பால்பட்டதும், |
| **अक्षर**<br>**அக்ஷர** | = | அழிவற்றதும், |
| **अद्वयं**<br>**அத்³வயம்** | = | இரண்டற்றதும், |
| **विशुद्धं**<br>**விஶுத்³த⁴ம்** | = | பரிசுத்தமானதும், |
| **स्वसंवेद्यं**<br>**ஸ்வஸம்வேத்³யம்** | = | ஸ்வயம்ப்ரகாசமாகவும் உள்ளதோ, |
| **सः**<br>**ஸः** | = | அது, |
| **तत्पदस्य**<br>**தத்பத³ஸ்ய** | = | 'தத்' என்ற பதத்திற்கு, |

**लक्ष्यार्थ:** = லக்ஷணையால் கிடைக்கக்கூடிய பொருள்.

**லக்ஷ்யார்த²:**

சுத்த ப்ரஹ்மம் தான் தத்பத லக்ஷ்யார்த்தம். இது உபநிஷத்தில் 'ஸத்யம் ஞானம் அநந்தம் ப்ரஹ்ம' இது முதலான வாக்யங்களால் காட்டப்படுகிறது. இது அழிவற்றது. ஒரே தத்வம். இதில் மாயை, அதன் குணங்கள், பிரபஞ்சம் முதலான வற்றின் ஸம்பந்தம் கொஞ்சமும் கிடையாது. தானே பிரகாசிக்கும் வஸ்து வேறு ஒன்றினாலும் பிரகாசிக்கப்படுவதில்லை. **(25)**

(**அவதாரிகை**) பதார்த்தங்களைக் கூறிவிட்டு வாக்யார்த்தத்தைக் கூறுகிறார்: -

**सामानाधिकरण्यं हि पदयोस्तत्त्वमोर्द्वयोः ।**
**सम्बन्धस्तेन वेदान्तैर्ब्रह्मैक्यं प्रतिपाद्यते ॥ २६ ॥**

**ஸாமாநாதி⁴கரண்யம் ஹி பத³யோஸ்தத்த்வமோர்த்³வயோ꞉ ।**
**ஸம்ப³ந்த⁴ஸ்தேன வேதா³ந்தைர்ப்³ரஹ்மைக்யம் ப்ரதிபாத்³யதே ॥ 26 ॥**

**तत्त्वमोः** = 'தத்' த்வம்' என்ற,

**தத்த்வமோ꞉**

**दूयोः पदयोः** = இரண்டு பதங்களுக்கும்,

**தூ³யோ꞉ பத³யோ꞉**

**सामानाधिकरण्यं हि** = ஸாமாநாதிகரண்யம் அல்லவா,

**ஸாமாநாதி⁴கரண்யம் ஹி**

**सम्बन्धः** = ஸம்பந்தம்,

**ஸம்ப³ந்த⁴:**

**तेन** = அதனால்,

**தேன**

**वेदान्तैः** = உபநிஷத் வாக்யங்களால்,

**வேதா³ந்தை:**

**ब्रह्मैक्यं** = ப்ரஹ்மாபேதம்,

**ப்³ரஹ்மைக்யம்**

**प्रतिपाद्यते** = விளக்கப்படுகிறது.

**ப்ரதிபாத்³யதே**

தத், த்வம், இவ்விருபதங்களும் 'தத்வமஸி' என்ற ஒரே வாக்யத்தில் இருப்பதால் ஒன்றுக்கொன்று சேர்ந்து கொண்டு தான் வாக்யார்த்தத்தை உண்டுபண்ணுகிறது. இவ்விருபதங்களின் ஸம்பந்தத்திற்கு ஸாமாநாதிகரண்யம் என்றுபெயர். ஒரே பொருளைக் குறிப்பதுதான் ஸாமாநாதிகரண்யம் என்பது. ஆகவே இந்த மஹா வாக்யத்திலிருந்து ப்ரஹ்மாபேத ஞானம் உண்டாகிறது. **(26)**

**(அவதாரிகை)** ஸாமாநாதிகரண்யம் என்பதை விவரிக்கிறார்: -

**भिन्नप्रवृत्तिहेतुत्वे पदयोरेकवस्तुनि ।**
**वृत्तित्वं यत्तथैवैकविभक्त्यन्तकयोस्तयोः ॥ २७ ॥**

**பி4ன்னப்ரவ்ருத்திஹேதுத்வே பத3யோரேகவஸ்துனி ।**
**வ்ருத்தித்வம் யத்ததை2வைகவிப4க்த்யந்தகயோஸ்தயோ: ॥ 27 ॥**

**सामानाधिकरण्यं तत्संप्रदायिभिरीरितम् ।**
**तथा पदार्थयोरेव विशेषणविशेष्यता ॥ २८ ॥**

**ஸாமாநாதி4கரண்யம் தத்ஸம்ப்ரதா3யிபி4ரீரிதம் ।**
**ததா2 பதா3ர்த2யோரேவ விஶேஷணவிஶேஷ்யதா ॥ 28 ॥**

| | | |
|---|---|---|
| **पदयो**<br>**பத3யோ** | = | இருபதங்களுக்கு, |
| **भिन्नप्रवृत्तिहेतुत्वे**<br>**பி4ன்னப்ரவ்ருத்திஹேதுத்வே** | = | ப்ரவ்ருத்தி நிமித்தம் வெவ்வேறாக இருக்கும்பொழுது, |
| **एकविभक्त्यन्तकयोः**<br>**ஏகவிப4க்த்யந்தகயோ:** | = | ஒரே விபக்தியை கடைசியில் கொண்ட, |
| **तयोः**<br>**தயோ:** | = | அவ்விரு பதங்களுக்கும், |
| **तथेव**<br>**ததே2வ** | = | அப்படியே, |
| **एकवस्तुनि**<br>**ஏகவஸ்துனி** | = | ஒரே பொருளில், |
| **वृत्तित्वं यत्**<br>**வ்ருத்தித்வம் யத்** | = | இருப்பது என்பது எதுவோ, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **सामानाधिकरण्यं**<br>**ஸாமாநாதி4கரண்யம்** | = | ஸாமாநாதிகரண்யம் என்று சாஸ்திர ஸம்ப்ரதாயம் அறிந்தவர்களால், |
| **ईरितं**<br>**ஈரிதம்** | = | சொல்லப்பட்டிருக்கிறது, |
| **तथा**<br>**ததா2** | = | அவ்விதமே, |
| **पदार्थयोरेव**<br>**பதா3ர்த2யோரேவ** | = | இரு பதங்களின் அர்த்தங்களுக்கும், |

**विशेषणविशेष्यता** = விசேஷண விசேஷ்யபாவம்

**விஶேஷணவிஶேஷ்யதா** (சொல்லப்பட்டிருக்கிறது)

ஒரு சொல் ஒரு பொருளைக் குறிக்கிறதென்றால் அதற்குத் தனிப்பட்ட காரணம் இருக்கிறது. இதற்கு 'ப்ரவ்ருத்தி நிமித்தம்' என்று பெயர். ப்ரவ்ருத்திக்கு - சொல் பொருளைக் குறிப்பதற்கு, நிமித்தம் - காரணம். ஒவ்வொரு சப்தத்திற்கும் ஒவ்வொன்று ப்ரவிருத்தி நிமித்தமாக இருக்கும் ஒரேமாதிரி விபக்தியுடன் கூடிய இரு பதங்களுக்கு ப்ரவ்ருத்தி நிமித்தம் வெவ்வேறாக இருந்தாலும் இரண்டும் ஒரே பொருளைக் குறிக்குமானால் அங்கு ஸாமாநாதிகரண்யம் இருப்பதாக சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. அதாவது **शुक्ला गौः** (**ஶுக்லா கௌ³ꞏ**) வெளுப்பு நிறமுள்ள பசு என்று சொல்கிறோம். இங்கு சுக்லபதமும் கோபதமும் ப்ரதமாவிபக்த்யந்தம். சுக்ல பதத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம் வெளுப்பு நிறம். கோபதத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம் கோத்வம் என்ற ஜாதி. ப்ரவ்ருத்தி நிமித்தம் வெவ்வேறாக இருந்தாலும் இரண்டு பதங்களும் சேர்ந்து ஒரே பசுவைக் குறிக்கிறது. ஆனால் இங்கு கோபதம் விசேஷ்யம், சுக்லபதம் விசேஷணம் விசேஷ்ய விசேஷணபாவம் உள்ள இடங்களில் ஸாமாநாதிகரண்யம் இருக்கும். **(27-28)**

(**அவதாரிகை**) மஹாவாக்யத்தில் வாச்யார்த்தத்தை விட்டு லக்ஷ்யார்த்தத்தை ஏற்றுக் கொள்வதன் காரணத்தைக் கூறுகிறார்: -

**अयं सः सोऽयमितिवत् संबन्धो भवति द्वयोः ।**
**प्रत्यक्त्वं सद्वितीयत्वं परोक्षत्वं च पूर्णता ॥ २९ ॥**

**அயம் ஸꞏ ஸோ(அ)யமிதிவத் ஸம்ப³ந்தோ⁴ ப⁴வதி த்³வயோꞏ ।**
**ப்ரத்யக்த்வம் ஸத்³விதீயத்வம் பரோக்ஷத்வம் ச பூர்ணதா ॥ 29 ॥**

**परस्परविरुद्धं स्यात् ततो भवति लक्षणा ।**
**लक्ष्यलक्षण संबन्धः पदार्थ प्रत्यगात्मनोः ॥ ३० ॥**

**பரஸ்பரவிருத்³த⁴ம் ஸ்யாத் ததோ ப⁴வதி லக்ஷணா ।**
**லக்ஷ்யலக்ஷண ஸம்ப³ந்த⁴ꞏ பதா³ர்த² ப்ரத்யகா³த்மனோꞏ ॥ 30 ॥**

**अयं सः** = இவன் அவன்,

**அயம் ஸꞏ**

**सोऽयं** = அவன் இவன்,

**ஸோ(அ)யம்**

**इतिवत्** = என்பதுபோல்,

**இதிவத்**

**द्वयोः** = இரண்டு பதங்களுக்கும்,

**த்³வயோꞏ**

| | | |
|---|---|---|
| **संबन्धः** ஸம்ப³ந்த⁴꞉ | = | ஸம்பந்தம், |
| **भवति** ப⁴வதி | = | ஏற்படுகிறது, |
| **प्रत्यक्त्वं** ப்ரத்யக்த்வம் | = | அபரோக்ஷமாயிருக்கும் தன்மையும், |
| **परोक्षत्वं** பரோக்ஷத்வம் | = | பரோக்ஷமாயிருக்கும் தன்மையும், |
| **सद्वितीयत्वं** ஸத்³விதீயத்வம் | = | இரண்டாவது பொருளுடன் கூடியிருக்கும் தன்மையும், |
| **पूर्णता च** பூர்ணதா ச | = | எங்கும் நிறைந்து ஒரே வஸ்துவாயிருக்கும் தன்மையும், |
| **परस्परविरुद्धं** பரஸ்பரவிருத்³த⁴ம் | = | ஒன்றுக்கொன்று எதிரிடையானதாக, |
| **स्यात्** ஸ்யாத் | = | ஆகும், |
| **ततः** தத꞉ | = | ஆகையால், |
| **लक्षणा** லக்ஷணு | = | லக்ஷணையானது, |
| **भवति** ப⁴வதி | = | இருக்கிறது, |
| **पदार्थ प्रत्यगात्मनोः** பதா³ர்த² ப்ரத்யகா³த்மனோ꞉ | = | பதத்திற்கும் அதன் அர்த்தமான ப்ரத்யகாத்மாவுக்கும், |
| **लक्ष्यलक्षण संबन्धः** லக்ஷ்யலக்ஷண ஸம்ப³ந்த⁴꞉ | = | லக்ஷ்யலக்ஷண ஸம்பந்தம். |

'**ஶுக்லா கௌ³꞉**' என்ற வாக்யத்தில் போல் தத்த்வமஸி வாக்யத்தில் விசேஷ்ய விசேஷண பாவத்தைக் கொண்ட ஸாமாநாதிகரயம் கூறமுடியாது. அவனே இவன், இவனே அவன் என்ற வாக்யத்தில் போல் அபேதத்தைத் தான் வாக்யார்த்தமாகக் கூறவேண்டும். ஏனெனில் வெளுப்பான பசுவை நாம் நேரில் காண்பதால் அந்த வாக்யார்த்தத்தில் விரோதம் ஒன்றுமில்லை. இங்கு நீ (ஜீவன்) அவனுக (ஈசுவரனுக) இருக்கிறுய் என்று வாச்யார்த்தத்தைக் கொண்டு பொருள் கூறினேமாளுல் இது ஒன்றுக்கொன்று விருத்தமாயிருக்கிறது. த்வம்பதத்தின் பொருளான ஜீவன் ப்ரத்யக்ஷமாக இருக்கிறது. பல வேற்றுமைகளுடன் கூடியது. தத்பதத்தின் பொருளான ஈசுவரனே பரோக்ஷம், எங்கும் நிறைந்த ஒரே வஸ்து. ஜீவன் ஈசுவரனுக இருக்க முடியாது. ஈசுவரன் ஜீவனுக இருக்க முடியாது. இவ்வாறு

வாசயாரத்தததில் விரோதம் ஏற்படுவதால் அதைவிட்டு லக்ஷணயால் வேறு அர்த்தத்தைக் கொள்ளவேண்டும். **(29-30)**

(**அவதாரிகை**) லக்ஷணயை விவரிக்கிருர்: -

**मानान्तरोपरोधाच्च मुख्यार्थस्यापरिग्रहे ।**
**मुख्यार्थस्याविनाभूते प्रवृत्तिर्लक्षणोच्यते ॥ ३१ ॥**

**மாஞந்தரோபரோதா⁴ச்ச முக்²யார்த²ஸ்யாபரிக்³ரஹே ।**
**முக்²யார்த²ஸ்யாவிநாபூ⁴தே ப்ரவ்ருத்திர்லக்ஷணோச்யதே ॥ 31 ॥**

| | | |
|---|---|---|
| **मानान्तरोपरोधाच्च** மாஞந்தரோபரோதா⁴ச்ச | = | வேறு ப்ரமாணத்திற்கு விரோதம் ஏற்படுவதால், |
| **मुख्यार्थस्य अपरिग्रहे** முக்²யார்த²ஸ்ய அபரிக்³ரஹே | = | முக்யமான அர்த்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாமல் இருக்கும்பொழுது, |
| **मुख्यार्थस्याविनाभूते** முக்²யார்த²ஸ்யாவிநாபூ⁴தே | = | முக்யார்த்தத்தில சேர்ந்துள்ள பொருளில், |
| **प्रवृत्तिः** ப்ரவ்ருத்தி꞉ | = | செல்வது, |
| **लक्षणा उच्यते** லக்ஷணு உச்யதே | = | லக்ஷணு என்று கூறப்படுகிறது. |

ஒரு வாக்யத்திலுள்ள பதங்களிலிருந்து கிடைக்கும் முக்யார்த்தத்தைச் சேர்த்துப்பார்த்ததில் அந்த வாக்யார்த்தம் ப்ரமாண விருத்தமாக இருக்குமாஞல் முக்யார்த்தத்துடன் சேர்ந்த வேறு பொருளை அந்த பதத்திற்கு அர்த்தமாகச் சொல்வது லக்ஷணு எனப்படும். **(31)**

(**அவதாரிகை**) லக்ஷணயின் பல விதங்களைக் கூறுகிருர்: -

**त्रिविधा लक्षणा ज्ञेया जहत्यजहती तथा ।**
**अन्योभयात्मिका ज्ञेया तत्राद्या नैव संभवेत् ॥ ३२ ॥**

**த்ரிவிதா⁴ லக்ஷணு ஜ்ஞேயா ஜஹத்யஜஹதீ ததா² ।**
**அன்யோப⁴யாத்மிகா ஜ்ஞேயா தத்ராத்³யா நைவ ஸம்ப⁴வேத் ॥ 32 ॥**

| | | |
|---|---|---|
| **लक्षणा** லக்ஷணு | = | லக்ஷணயானது, |
| **त्रिविधा** த்ரிவிதா⁴ | = | மூன்று விதமாக, |

**ज्ञेया** = அறியத்தக்கது,

**ஜ்ஞேயா**

**जहती** = விட்டது,

**ஜஹதீ**

**तथा** = அவ்விதம்,

**ததா2**

**अजहती** = விடாதது,

**அஜஹதீ**

**अन्या** = மற்றது (மூன்றுவது),

**அன்யா**

**उभयात्मिका** = இரண்டுமாக இருப்பதாக (விட்டும் விடாதது),

**உப4யாத்மிகா**

**ज्ञेया** = அறியத்தகுந்தது,

**ஜ்ஞேயா**

**तत्र** = அதில்,

**தத்ர**

**आद्या** = முதலாவது,

**ஆத்3யா**

**नैव संभवेत्** = பொருந்தாது.

**நைவ ஸம்ப4வேத்**

ஜஹதலக்ஷணை (விட்டலக்ஷணை), அஜஹத்லக்ஷணை (விடாதலக்ஷணை), ஜஹதஜஹத்லக்ஷணை (விட்டும் விடாத லக்ஷணை) என்று லக்ஷணை மூன்றுவிதம். இவற்றில் முதலாவதான ஜஹத்லக்ஷணை தத்த்வமஸி வாக்யத்தில் பொருந்தாது. **(32)**

**(அவதாரிகை)** முதலாவதான ஜஹத்லக்ஷணையை விளக்குகிறர்: -

**वाच्यार्थमखिलं त्यक्त्वा वृत्तिः स्याद्या तदन्विते ।**
**गङ्गायां घोष इतिवत् जहती लक्षणा हि सा ॥ ३३ ॥**

**வாச்யார்த2மகி2லம் த்யக்த்வா வ்ருத்திஃ ஸ்யாத்3யா தத3ன்விதே ।**
**க3ங்கா3யாம் கோ4ஷ இதிவத் ஜஹதீ லக்ஷணா ஹி ஸா ॥ 33 ॥**

**वाच्यार्थमखिलं** = வாச்யார்த்தம் முழுவதையும்,

**வாச்யார்த2மகி2லம்**

**त्यक्त्वा** = அதனுடன் சேர்ந்த வேறு பொருளில்,

**த்யக்த்வா**

**तदन्विते** = இருப்பது யாதொன்று உண்டோ,

**தத3ன்விதே**

| | | |
|---|---|---|
| **सा**<br>**ஸா** | = | அது, |
| **गङ्गायां घोष इतिवत्**<br>**க³ங்கா³யாம் கோ⁴ஷ இதிவத்** | = | கங்கையில் இடைச்சேரி என்பதில்போல, |
| **जहती लक्षणा हि**<br>**ஜஹதீ லக்ஷணா ஹி** | = | ஜஹத்லக்ஷணையல்லவா. |

சப்தத்திலிருந்து கிடைக்கககூடிய வாச்யார்த்தத்தை விட்டுவிட்டு அதனுடன் ஸம்பந்தமுள்ள வேறொரு வஸ்துவை இந்தப் பதத்திற்குப் பொருளாகக்கூறுவது ஜஹத்லக்ஷணை எனப்படும். உதாஹரணம்: - (**க³ங்கா³யாம் கோ⁴ஷ:**) (**गङ्गायां घोष:**) இந்த வாகயத்திற்கு கங்கையில் இடைச்சேரி இருக்கிறது என்பது பொருள். கங்கை என்னும் சொல் இருகரைகளுககுள் ஓடுகிற பிரவாஹத்தைக் குறிக்கும். அதுதான் வாச்யார்த்தம் ஜலப்ரவாஹத்தில் இடைச்சேரி இருக்கமுடியாது வாச்யார்த்தமான ப்ரவாஹத்தைக் கொண்டால் விரோதம் ஏற்படுகிறது அதனுல் இங்கு வாச்யார்த்த மான ப்ரவாஹத்தை விட்டுவிட்டு பிரவாஹத்தை ஒட்டியுள்ள கரையை கங்கா பதத்தின் பொருளாக லக்ஷணையால் சொல்கிறேம். கங்கைக் கரையில் இடைச்சேரி இருக்கலாம். இப்பொழுது விரோதம் இல்லை. இங்கு வாச்யார்த்தம் முழுவதையும் விட்டுவிடுவதால் இதற்கு ஜஹத்லக்ஷணை (விட்டலக்ஷணை) என்று பெயர்.

(**அவதாரிகை**) மஹாவாகயத்தில் ஜஹத்லக்ஷணை பொருந்தாது என்பதைக் காட்டுகிறர்: -

**वाच्यार्थस्यैकदेशस्य प्रकृते त्याग इष्यते ।**
**जहती संभवेत् नैव संप्रदायविरोधतः ॥ ३४ ॥**

**வாச்யார்த²ஸ்யைகதே³ஶஸ்ய ப்ரக்ருதே த்யாக³ இஷ்யதே ।**
**ஜஹதீ ஸம்ப⁴வேத் நைவ ஸம்ப்ரதா³யவிரோத⁴த: ॥ 34 ॥**

| | | |
|---|---|---|
| **प्रकृते**<br>**ப்ரக்ருதே** | = | இங்கு கூறப்படும் தத்த்வமஸி வாக்யத்தில், |
| **वाच्यार्थस्य**<br>**வாச்யார்த²ஸ்ய** | = | வாச்யார்த்தத்தினுடைய, |
| **एकदेशस्य**<br>**ஏகதே³ஶஸ்ய** | = | ஒரு அம்சத்திற்கு, |
| **त्याग**<br>**த்யாக³** | = | விடுதல், |
| **इष्यते**<br>**இஷ்யதே** | = | விரும்பப்படுகிறது. (ஆகையால்), |

**संप्रदायविरोधतः** = சாஸ்திர ஸம்ப்ரதாயத்திற்கு
**ஸம்ப்ரதா3யவிரோத4த:** விரோதமாயிருப்பதால்,

**जहती** = ஜஹத்லக்ஷணை,
**ஜஹதீ**

**नैव संभवेत्** = இங்கு ஸம்பவிக்காது.
**நைவ ஸம்ப4வேத்**

'தத்த்வமஸி' மஹாவாக்யத்தில் தத்பதத்திற்கு மாயை என்ற உபாதியுடன் கூடிய சை தன்யம் தான் வாச்யார்த்தம். இதில் ஒரு அம்சமான உபாதியை விட்டு மற்றோர் அம்சமான சைதன்யத்தை மட்டும் தத்பதத்தின் பொருளாகக் கொள்கிறோம். இவ்விதமே தேஹாதிகள் என்ற உபாதியுடன் கூடிய சைதன்யம் என்ற த்வம்பத வாசியார்த்தத்திலும் ஏகதேசமான உபாதியைவிட்டு மற்றோர் அம்சமான சைதன்யத் தை த்வம்பதத்தின் பொருளாகச் சொல்கிறோம். 'கங்காயாம்' என்பதில் ப்ரவாஹம் என்ற வாச்யார்த்தம் முழுவதையும் விட்டு கரை என்ற வேறு அர்த்தத்தைக் கொள்வ தால் அங்கு ஜஹத்லக்ஷணை (விட்டலக்ஷணை) பொருந்தும். மஹாவாக்யத்தில் வாச்யார்த்தம் முழுவதையும் விடாதபடியாலும் ஏகதேசத்தை வைத்துக்கொள்வதா லும் இங்கு ஜஹத்லக்ஷணை (விட்டலக்ஷணை) பொருந்தாது. **(34)**

**(அவதாரிகை)** அஜஹத்லக்ஷணையை விவரிக்கிறார்:

**वाच्यार्थमपरित्यज्य वृत्तिरन्यार्थके तु या ।**
**कथितेयमजहती शोणोऽयं धावतीतिवत् ॥ ३५ ॥**

**வாச்யார்த2மபரித்யஜ்ய வ்ருத்திரன்யார்த2கே து யா ।**
**கதி2தேயமஜஹதீ ஶோணோ(அ)யம் தா4வதீதிவத் ॥ 35 ॥**

**वाच्यार्थं** = வாச்யமான பொருளை,
**வாச்யார்த2ம்**

**अपरित्यज्य** = விடாமல்,
**அபரித்யஜ்ய**

**अन्यार्थके तु** = வேறு பொருளில்,
**அன்யார்த2கே து**

**वृत्तिः या** = இருப்பது எதுவோ,
**வ்ருத்தி: யா**

**इयं** = இது,
**இத2ம்**

**शोणोऽयं धावतीतिवत्** = சிகப்பு நிறமுள்ள இது (குதிரை)
**ஶோணோ(அ)யம் தா4வதீதிவத்** ஓடுகிறது என்பதில்போல,

**अजहती** = அஜஹத்லக்ஷணையாக,

**அஜஹதீ**

**कथिता** = கூறப்பட்டுள்ளது.

**கதி2தா**

வாச்யமான பொருளையும் விடாமல் வாசயமல்லாத வேறு பொருளையும் குறிக்குமானுல் அங்கு அஜஹத்லக்ஷணையாகும் **शोणो धावति (ஶோணோ தா4வதி)** என்ற வாக்யத்தில் சோணபதத்திற்கு சிகப்புநிறம் என்று பொருள். நிறம் என்பது குணமானதால் அது திரவ்யத்தை விட்டுத் தனியாக இருக்காது. சிகப்புநிறம் மட்டும் தனியாக ஓடாது. ஆகவே 'சிவப்புநிறம் ஓடுகிறது' என்ற வாக்யார்த்தத்தில் ப்ரத்யக்ஷ விரோதம் ஏற்படுவதால் சோணபதத்திற்கு சிகப்பு நிறமுள்ள குதிரை என்று லக்ஷணையால் பொருள் சொல்கிறோம் இங்கு வாச்யார்த்தமான சிகப்பு நிறத்தை விடாமல் அதையும் சேர்த்து சிகப்புக் குதிரை என்று பொருள் கூறுவதால் இங்கு அஜஹத்லக்ஷணையாகும்.

**(அவதாரிகை)** மஹாவாக்யத்தில் அஜஹத்லக்ஷணை பொருந்தாது என்பதைக் காட்டுகிறார்: -

**न संभवति साऽप्यत्र वाच्यार्थेऽतिविरोधतः ।**
**विरोधांशपरित्यागो दृश्यते प्रकृते यतः ॥ ३६ ॥**

**ந ஸம்ப4வதி ஸா(அ)ப்யத்ர வாச்யார்தே2(அ)திவிரோத4த: ।**
**விரோதா4ம்ஶபரித்யாகோ3 த்3ருஶ்யதே ப்ரக்ருதே யத: ॥ 36 ॥**

**यतः** = எந்தக் காரணத்தால்,

**யத:**

**प्रकृते** = ப்ரக்ருதமான தத்வமஸி வாக்யத்தில்,

**ப்ரக்ருதே**

**वाच्यार्थे** = வாச்யமான பொருளில்,

**வாச்யார்தே2**

**अतिविरोधतः** = மிகுந்த விரோதமிருப்பதால்,

**அதிவிரோத4த:**

**विरोधांशपरित्यागः** = விருத்தமான பாகத்தைக் கைவிடுவது,

**விரோதா4ம்ஶபரித்யாக3:**

**दृश्यते** = காணப்படுகிறதோ (ஆகையால்),

**த்3ருஶ்யதே**

**अत्र** = இங்கு,

**அத்ர**

| | | |
|---|---|---|
| **साऽपि**<br>**ஸா(அ)பி** | = | அந்த அஜஹத்ரக்ஷணையும், |
| **न संभवति**<br>**ந ஸம்ப⁴வதி** | = | பொருந்தாது. |

'தத்த்வமஸி' மஹாவாக்யத்தில் அஜஹத்லக்ஷணையும் பொருந்தாது. வாச்யார்த்தத்தை விடாமல் முழுவதும் சேர்த்துக்கொண்டால்தான் அஜஹத்லக்ஷணை சொல்லலாம். மஹா வாக்யத்திலோ வாச்யார்த்தமான உபாதிகளைச் சேர்த்துக் கொண்டால் விரோதம் ஏற்படுகிறது. அதற்காக விருத்தமான அம்சத்தை விட்டுவிடுகிறோம். ஆகையால் அஜஹத்லக்ஷணையும் இல்லை. **(36)**

**(அவதாரிகை)** மூன்றுவதான ஜஹதஜஹத் லக்ஷணையைக் கூறுகிறார்: -

**वाच्यार्थस्यैकदेशं च परित्यज्यैकदेशकम् ।**
**या बोधयति सा ज्ञेया तृतीया भागलक्षणा ॥ ३७ ॥**

**வாச்யார்த²ஸ்யைகதே³ஶம் ச பரித்யஜ்யைகதே³ஶகம் ।**
**யா போ³த⁴யதி ஸா ஜ்ஞேயா த்ருதீயா பா⁴க³லக்ஷணா ॥ 37 ॥**

| | | |
|---|---|---|
| **वाच्यार्थस्य**<br>**வாச்யார்த²ஸ்ய** | = | வாச்யமான அர்த்தத்தின், |
| **एकदेशं**<br>**ஏகதே³ஶம்** | = | ஒரு அம்சத்தை, |
| **परित्यज्य**<br>**பரித்யஜ்ய** | = | விட்டுவிட்டு, |
| **एकदेशकं**<br>**ஏகதே³ஶகம்** | = | மற்றோர் அம்சத்தை, |
| **या**<br>**யா** | = | எது, |
| **बोधयति**<br>**போ³த⁴யதி** | = | அறிவிக்கிறதோ, |
| **सा**<br>**ஸா** | = | அது, |
| **तृतीया**<br>**த்ருதீயா** | = | மூன்றுவதான, |
| **भागलक्षणा**<br>**பா⁴க³லக்ஷணா** | = | பாகலக்ஷணையாக, |
| **ज्ञेया**<br>**ஜ்ஞேயா** | = | அறியத்தகுந்தது. |

வாச்யமான அர்த்தத்தில் ஒரு அம்சத்தை விட்டுவிட்டு மற்றோர் அம்சத்தை மட்டும் பதத்திற்குப் பொருளாகக் கூறுவதானுல் அது மூன்றுவதான ஜஹதஜஹத் லக்ஷணை எனப்படும். வாச்யார்த்தத்தில் ஒரு பாகத்தை விட்டு ஒரு பாகத்தை எடுத்துக்கொள்வதால் இதற்கு பாகலக்ஷணை என்றும் பெயர் உண்டு. **(37)**

**(அவதாரிகை)** பாகலக்ஷணைக்கு திருஷ்டாந்தம் கூறுகிருர்: -

**सोऽयं विप्र इदं वाक्यं बोधयत्यादितस्तथा ।**
**तत्कालत्वविशिष्टं च तथैतत्कालसंयुतम् ॥ ३८ ॥**

**ஸோ(அ)யம் விப்ர இத³ம் வாக்யம் போ³த⁴யத்யாதி³தஸ்ததா² ।**
**தத்காலத்வவிஶிஷ்டம் ச ததை²தத்காலஸம்யுதம் ॥ 38 ॥**

**अतस्तयोर्विरुद्धं तत्तत्कालत्वादिधर्मकम् ।**
**त्यक्त्वा वाक्यं यथा विप्रपिण्डं बोधयतीरितम् ॥ ३९ ॥**

**அதஸ்தயோர்விருத்³த⁴ம் தத்தத்காலத்வாதி³த⁴ர்மகம் ।**
**த்யக்த்வா வாக்யம் யதா² விப்ரபிண்ட³ம் போ³த⁴யதீரிதம் ॥ 39 ॥**

**तथैव प्रकृते तचमसीत्यत्र श्रुतौ शृणु ।**

**ததை²வ ப்ரக்ருதே தசமஸீத்யத்ர ஶ்ருதௌ ஶ்ருணு ।**

**सोऽयं विप्रः** = அந்த இந்த ப்ராஹ்மணன்,
**ஸோ(அ)யம் விப்ர:**

**इदं वाक्यं** = இந்த வாக்கியம்,
**இத³ம் வாக்யம்**

**आदितः** = முதலில்,
**ஆதி³த:**

**तथा** = அப்படியே,
**ததா²**

**तत्कालत्वविशिष्टं** = அந்த காலத்துடன் கூடினவரும்,
**தத்காலத்வவிஶிஷ்டம்**

**तथा** = அவ்விதமே,
**ததா²**

**एतत्कालसंयुतं** = இந்தக் காலத்துடன் கூடினவருமான பிராமணனை,
**ஏதத்காலஸம்யுதம்**

**बोधयति** = அறிவிக்கிறது.
**போ³த⁴யதி**

| | | |
|---|---|---|
| **अत:**<br>**அத:** | = | ஆகையால், |
| **तयो:**<br>**தயோ:** | = | அவைகளில், |
| **विरुद्धं**<br>**விருத்³த⁴ம்** | = | விருத்தமான, |
| **तत्**<br>**தத்** | = | அந்த, |
| **तत्तत्कालत्वादिधर्मकं**<br>**தத்தத்காலத்வாதி³த⁴ர்மகம்** | = | அந்தக்காலம் முதலான தர்மத்தை, |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டுவிட்டு, |
| **वाक्यं**<br>**வாக்யம்** | = | வாக்யமானது, |
| **यथा**<br>**யதா²** | = | எப்படி, |
| **विप्रपिण्डं**<br>**விப்ரபிண்ட³ம்** | = | பிராமணவ்யக்தியை, |
| **बोधयति**<br>**போ³த⁴யதி** | = | அறிவிக்கிறது (என்று), |
| **ईरितम्**<br>**ஈரிதம்** | = | சொல்லப்பட்டு உள்ளதோ, |
| **तथैव**<br>**ததை²வ** | = | அவ்விதமே, |
| **प्रकृते**<br>**ப்ரக்ருதே** | = | ப்ரக்ருதமான, |
| **तचमसीत्यत्र**<br>**தசமஸீத்யத்ர** | = | தத்வமஸி என்ற இந்த, |
| **श्रुतौ**<br>**ஶ்ருதௌ** | = | வேத வாக்யத்தில், |
| **शृणु**<br>**ஶ்ருணு** | = | கேள். |

காசியில் புதிதாக ஒரு பிராமணரைக் கண்டு பேசினுன். சிறிதுகாலம் கழித்து அதே பிராமணரை ராமேசுவரத்தில் கண்டான். பார்த்தவுடன் "எங்கேயோ பார்த்த ஞாபகம் வருகிறதே" என்று ஆலோசித்துப் பார்க்கிறுன். உடன் ஞாபகம் வந்துவிடு கிறது. **सोयं विप्रः** (**ஸோயம் விப்ர:**) "அவன்தான் இந்த பிராமணன்" என்று

சொல்கிறுன். காசியில் அன்று பார்த்தோமே அந்த பிராமணன் தான் இவன் என்பது இந்த வாகயத்தின் பொருள். இந்த வாக்யத்தில் **सः (ஸ:)** என்ற பதத்திற்கு அந்த காசி தேசம், அந்த காலம் இவைகளுடன் சேர்ந்த பிராமணன் என்று அர்த்தம் **अयं (அயம்)** என்ற பதத்திற்கு இந்த ராமேசுவர தேசம், இந்தக் காலம் இவைகளுடன் சேர்ந்த பிராமணன் என்று அர்த்தம். இரண்டும் ஒன்று என்பதை வாக்யம் காட்டுகிறது. இது விருத்தம். காசியும் ராமேசுவரமும், அந்தக் காலமும் இந்தக் காலமும் ஒன்றுக முடியாது. அதற்காக **सः (ஸ:) अयं (அயம்)** என்ற பதங்களின் வாச்யார்த்தத்தில் ஏகதேசமான காலதேசங்களை விட்டு மற்றேர் பாகமான பிராமண வியக்தியை மட்டும் இரு பதங்களும் லக்ஷணையால் கூறுவதாக ஒப்புக்கொண்டு இந்த வாக்யம் அபேதத்தை போதிக்கிறதாகச் சொல்கிறேம். இதுதான் பாகலக்ஷணை. இதேபோல் தத்த்வமஸி மஹா வாக்யத்திலும் ஐக்யம்தான் அர்த்தம். **(39)**

**(அவதாரிகை)** தார்ஷ்டாந்திகத்தில் ஸமந்வயப்படுத்துகிறுர்: -

**प्रत्यक्त्वादीन् परित्यज्य जीवधर्मांस्त्वमः पदात् ॥ ४० ॥**

**ப்ரத்யக்த்வாதீ³ன் பரித்யஜ்ய ஜீவத⁴ர்மாம்ஸ்த்வமः பதா³த் ॥ 40 ॥**

**सर्वज्ञत्वपरोक्षादीन् परित्यज्य तदः पदात् ।**
**शुद्धं कूटस्थमद्वैतं बोधयत्यादरात्परम् ॥ ४१ ॥**

**ஸர்வஜ்ஞத்வபரோக்ஷாதீ³ன் பரித்யஜ்ய தத³ः பதா³த் ।**
**ஶுத்³த⁴ம் கூடஸ்த²மத்³வைதம் போ³த⁴யத்யாத³ராத்பரம் ॥ 41 ॥**

**तत्त्वमोः पदयोरैक्यमेव तत्त्वमसीत्यलम् ।**

**தத்த்வமோः பத³யோரைக்யமேவ தத்த்வமஸீத்யலம் ।**

| | | |
|---|---|---|
| **त्वमः पदात्** **த்வமः பதா³த்** | = | த்வம்பதத்திலிருந்து கிடைக்கும், |
| **प्रत्यक्त्वादीन्** **ப்ரத்யக்த்வாதீ³ன்** | = | ப்ரத்யக்த்வம் முதலான, |
| **जीवधर्मान्** **ஜீவத⁴ர்மான்** | = | ஜீவனுடைய தர்மங்களை, |
| **परित्यज्य** **பரித்யஜ்ய** | = | விட்டு, |
| **तदः पदात्** **தத³ः பதா³த்** | = | தத்பதத்திலிருந்து கிடைக்கும், |
| **सर्वज्ञत्वपरोक्षादीन्** **ஸர்வஜ்ஞத்வபரோக்ஷாதீ³ன்** | = | ஸர்வஜ்ஞத்வம், பரோக்ஷம் முதலான தர்மங்களை, |

| | | |
|---|---|---|
| **परित्यज्य**<br>**பரித்யஜ்ய** | = | விட்டு, |
| **तत्वमसि इति**<br>**தத்வமஸி இதி** | = | தத்த்வமஸி என்ற வாக்யம், |
| **तत्त्वमोः पदयोः**<br>**தத்த்வமோ꞉ பத³யோ꞉** | = | தத்த்வம் பதார்த்தங்களின், |
| **ऐक्यमेव**<br>**ஐக்யமேவ** | = | அபேதத்தைத் தான் (அதாவது), |
| **शुद्धं**<br>**ஶுத்³த⁴ம்** | = | சுத்தமாயும், |
| **कूटस्थं**<br>**கூடஸ்த²ம்** | = | விகாரமற்றதாயும், |
| **अद्वैतं**<br>**அத்³வைதம்** | = | இரண்டற்றதாயுமுள்ள, |
| **परं**<br>**பரம்** | = | பரப்ரஹ்மத்தை, |
| **आदरात्**<br>**ஆத³ராத்** | = | கருத்துடன், |
| **अलं**<br>**அலம்** | = | நன்கு, |
| **बोधयति**<br>**போ³த⁴யதி** | = | அறியப்படுத்துகிறது. |

தத்த்வமஸி மஹாவாக்யத்தில் த்வம்பதத்திற்கு அபரோக்ஷத்வம், பேதம் முதலிய தர்மங்களுடன் கூடிய சைதன்யம் வாச்யார்த்தம். இதில் முதலில் கூறப்பட்ட தர்மங்களை விட்டுவிட வேண்டும். தத்பதத்திற்கு ஸர்வஞ்த்வம், பரோக்ஷத்வம் முதலிய தர்மங்களுடன் கூடிய சைதன்யம் வாச்யார்த்தம். இதிலும் முதலில் கூறப்பட்ட தர்மங்களை விட்டுவிடவேண்டும். வாச்யார்த்தத்தில் மிஞ்சியுள்ள சைதன்யம் தான் லக்ஷணையால் இரண்டு பதங்களுக்கும் பொருள் ஆகிறது. அது ஒன்றுதான் என்பதை வாக்யம் காட்டுகிறது. இந்த சைதன்யம் சுத்தமானது, ஒருவித தர்மங்களும் அற்றது. விகாரமில்லாதது. இது ஒன்றுதான். இதில் பேதம் கிடையாது சுத்த சைதன்யம் ஒன்று என்பதுதான் மஹா வாக்யத்தின் அர்த்தம். இதில் விரோதம் இல்லை. **(41)**

**(அவதாரிகை)** தத்வஞான பலனைக் கூறுகிறார்: -

## इत्थमैक्यावबोधेन सम्यग्ज्ञानं दृढं नयैः ॥ ४२ ॥

**இத்த²மைக்யாவபோ³தே⁴ன ஸம்யக்³ஜ்ஞானம் த்³ருட⁴ம் நயை꞉ ॥ 42 ॥**

## अहं ब्रह्मेति विज्ञानं यस्य शोकं तरत्यसौ ।

**அஹம் ப்³ரஹ்மேதி விஜ்ஞானம் யஸ்ய ஶோகம் தரத்யஸௌ ।**

| | | |
|---|---|---|
| **इत्थं** **இத்த²ம்** | = | இவ்வாறு, |
| **नयैः** **நயைஃ** | = | யுக்திகளால் (உண்டாகும்), |
| **ऐक्यावबोधेन** **ஐக்யாவபோ³தே⁴ன** | = | அபேத ஞானத்தால், |
| **सम्यग्ज्ञानं** **ஸம்யக்³ஜ்ஞானம்** | = | தத்வஞானம், |
| **दृढं** **த்³ருட⁴ம்** | = | உறுதியாகி, |
| **यस्य** **யஸ்ய** | = | எவனுக்கு, |
| **अहं ब्रह्म इति** **அஹம் ப்³ரஹ்ம இதி** | = | நான் ப்ரஹ்மம், என்ற, |
| **विज्ञानं** **விஜ்ஞானம்** | = | ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறதோ, |
| **असौ** **அஸௌ** | = | அவன், |
| **शोकं** **ஶோகம்** | = | பிறவித் துன்பத்தை, |
| **तरति** **தரதி** | = | தாண்டுகிறுன். |

இவ்வாறு பல யுக்திகஊக்கொண்டு மஹாவாக்யார்த்தத்தை நன்கு ஆராய்ந்து பார்த்தோமாஞல், ஜீவஸ்வரூபமும் ஈச்வரஸ்வரூபமும் ஒன்று என்ற அபேத ஞானம் ஏற்பட்டு இதை அப்யாஸம் செய்வதால் தத்வஞானம் உறுதிப்பட்டு 'நானே ப்ரஹ்மம்' என்ற ஸாக்ஷாத்காரம் ஏற்படும். அவனுக்கு ஸம்ஸாரத்தாலுண்டாகும் துன்பம் நீங்கிவிடும்.

**(அவதாரிகை)** ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு குருவின் உபதேசத்தை முக்ய ஸாதனமாகக் கூறுகிருர்: -

## आत्मा प्रकाशमानोऽपि महावाक्यैस्तथैकता ॥ ४३ ॥

**ஆத்மா ப்ரகாஶமாஞே(அ)பி மஹாவாக்யைஸ்ததை²கதா ॥ 43 ॥**

**तत्त्वमोर्बोध्यतेऽथापि पौर्वापर्यानुसारतः ।**
**तथापि शक्यते नैव श्रीगुरोः करुणां विना ॥ ४४ ॥**

**தத்த்வமோர்போ3த்4யதே(அ)தா2பி பௌர்வாபர்யானுஸாரத: ।**
**ததா2பி ஶக்யதே நைவ ஶ்ரீகு3ரோ: கருணாம் விநா ॥ 44 ॥**

**अपरोक्षयितुं लोके मूढैः पण्डितमानिभिः ।**

**அபரோக்ஷயிதும் லோகே மூடை4: பண்டி3தமானிபி4: ।**

| | | |
|---|---|---|
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மா, |
| **प्रकाशमानोऽपि**<br>**ப்ரகாஶமானோ(அ)பி** | = | விளங்கியபோதிலும், |
| **तथा**<br>**ததா2** | = | அப்படியே, |
| **महावाक्यैः**<br>**மஹாவாக்யை:** | = | மஹா வாக்யங்களால், |
| **पौर्वापर्यानुसारतः**<br>**பௌர்வாபர்யானுஸாரத:** | = | முன்னும் பின்னும் சொல்லியிருக்கும் விஷயத்தை அனுஸரித்து, |
| **तत्त्वमोः**<br>**தத்த்வமோ:** | = | தத்பதார்த்தமான ஈசுவரனுக்கும் த்வம்பதார்த்தமான ஜீவனுக்கும், |
| **एकता**<br>**ஏகதா** | = | அபேதம், |
| **बोध्यते अथापि**<br>**போ3த்4யதே அதா2பி** | = | அறிவிக்கப்படுகிறதாயிருந்த போதிலும், |
| **तथापि**<br>**ததா2பி** | = | அவ்விதமிருந்தபோதிலும், |
| **लोके**<br>**லோகே** | = | உலகில், |
| **पण्डितमानिभिः**<br>**பண்டி3தமானிபி4:** | = | பண்டிதர் என்ற கர்வம்கொண்ட, |
| **मूढैः**<br>**மூடை4:** | = | மூடர்களால், |
| **श्रीगुरोः**<br>**ஶ்ரீகு3ரோ:** | = | ஸத்குருவின், |
| **करुणां विना**<br>**கருணாம் விநா** | = | கருணை இல்லாமல், |

**अपरोक्षयितुं** = நேரில் அறிந்துகொள்வதற்கு,

**அபரோக்ஷயிதும்**

**नैव शक्यते** = முடியாது.

**நைவ ஶக்யதே**

ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மவஸ்து எல்லோருக்கும் விளங்கிக்கொண்டுதான் இருக்கிறது. மஹாவாக்யங்களை முன் பின் நன்கு ஆராய்ந்து பார்த்தோமானால் தத்பதார்த்தமான ஈசுவர ஸ்வரூபமும் தவம்பதார்த்தமான ஜீவஸ்வரூபமும் ஒன்று தான் என்பதும் தெரிகிறது. ஆனாலும் எல்லாம் பரோக்ஷமாக இருக்கிறதே தவிற ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படுவதில்லை எவர் ஸத்குருவைத் தேடியடைந்து சரணம் அடைகின்றனரோ, எவரிடம் கருணைபுரிந்து குரு உபதேசம் செய்கிறரோ அவருக்குத் தான் ஆத்மாநுபவம் ஏற்படும். இது ஏற்படாதவரை எத்தனை சாஸ்திரங்கள் வாசித்த போதிலும், உலகம் இவனைப் பண்டிதர் என்று சொன்னபோதிலும், நான் மஹாபண்டிதன் என்று எண்ணி கர்வம் அடைந்தபோதிலும் அவன் மூடன்தான். **(44)**

**अन्तःकरणसंशुद्धौ स्वयं ज्ञानं प्रकाशते ॥ ४५ ॥**

**அந்தःகரணஸம்ஶுத்³தௌ⁴ ஸ்வயம் ஜ்ஞானம் ப்ரகாஶதே ॥ 45 ॥**

**वेदवाक्यैरतः किं स्यात् गुरुणेति न सांप्रतम् ।**

**வேத³வாக்யைரதः கிம் ஸ்யாத் கு³ருணேதி ந ஸாம்ப்ரதம் ।**

**अन्तःकरणसंशुद्धौ** = மனமானது பரிசுத்தமாக ஆனதும்,

**அந்தःகரணஸம்ஶுத்³தௌ⁴**

**वेदवाक्यैः** = உபநிஷத் வாக்யங்களால்,

**வேத³வாக்யை:**

**ज्ञानं** = ஞானமானது,

**ஜ்ஞானம்**

**स्वयं** = தானாகவே,

**ஸ்வயம்**

**प्रकाशते** = ப்ரகாசிக்கிறது,

**ப்ரகாஶதே**

**अतः** = ஆகையால்,

**அதः**

**गुरुणा** = குருவினால்,

**கு³ருணா**

**किं स्यात्** = என்ன பிரயோஜனம் ஏற்படும்,

**கிம் ஸ்யாத்**

| | | |
|---|---|---|
| **इति**<br>**இதி** | = | என்பது, |
| **न सांप्रतम्**<br>**ந ஸாம்ப்ரதம்** | = | உசிதம் இல்லை. |

வேதாத்யயனம் செய்து சாஸ்திரங்களையும் நன்கு அப்யஸித்து கர்மானுஷ்டானமும் செய்துவந்தால் மனது பரிசுத்தமாகும். அவன் உபநிஷத் வாக்யங்களின் அர்த்தத்தை நன்கு பரிசீலனம் செய்தால் தனது புத்தித்திறமையாலும் சாஸ்திர ஞானத்தாலும் தானுகவே ஆத்ம ஞானம் ஏற்பட்டுவிடும். ஆகையால் குரு தேவையில்லையே! அவரால் என்ன பிரயோஜனம் என்று சிலர் கூறுகிருர்கள். இவர்கள் சொல்வது யுக்தமல்ல. **(45)**

**(அவதாரிகை)** குரு அவச்யம் எனபதற்கு உபநிஷத் ப்ரமாணத்தைக் காட்டுகிருர்: -

## आचार्यवान् पुरुषो हि वेदेत्येवं श्रुतिर्जगौ ॥ ४६ ॥

**ஆசார்யவான் புருஷோ ஹி வேதே³த்யேவம் ஶ்ருதிர்ஜகௌ³ ॥ 46 ॥**

## अनादाविह संसारे बोधको गुरुरेव हि ।

**அநாதா³விஹ ஸம்ஸாரே போ³த⁴கோ கு³ருரேவ ஹி ।**

| | | |
|---|---|---|
| **आचार्यवान्**<br>**ஆசார்யவான்** | = | ஆசார்யனுடன்கூடிய, |
| **पुरुषः**<br>**புருஷ:** | = | மனிதன், |
| **वेद**<br>**வேத³** | = | அறிந்துகொள்கிருன், |
| **इत्येवं**<br>**இத்யேவம்** | = | என்று இவ்விதமாக, |
| **श्रुतिः**<br>**ஶ்ருதி:** | = | வேதம், |
| **जगौ हि**<br>**ஜகௌ³ ஹி** | = | சொல்லியுள்ளது அல்லவா! (ஆகையால்), |
| **अनादौ**<br>**அநாதௌ³** | = | ஆரம்பமில்லாத, |
| **इह संसारे**<br>**இஹ ஸம்ஸாரே** | = | இந்த ஸம்ஸாரத்தில், |

| | | |
|---|---|---|
| **बोधक:**<br>**போ³த⁴க:** | = | ஞானத்தைத்தருபவர், |
| **गुरुरेव हि**<br>**கு³ருரேவ ஹி** | = | குருநாதன் அல்லவா. |

சாந்தோக்ய உபநிஷத்தில் ஆறுவது அத்யாயத்தில் (14-2) ச்வேதகேதுவுக்கு ஆருணி 'தத்த்வமஸி' மஹாவாக்யத்தை உபதேசம் செய்யும் இடத்தில் 'ஆசார்ய வான் புருஷோவேத' என்னும் வாக்யம் காணப்படுகிறது. ஆசார்யரோடு கூடிய, அதாவது ஆசார்யரிடமிருந்து உபதேசம் பெற்றவர்தான் ஆத்மாவை அறிகிறுன், அவனுக்குத்தான் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்பது இந்த வாக்யத்தின் கருத்து. இது மட்டும் அல்ல உலகானுபவமும் இவ்விதமே தான் இருக்கிறது. அுனுதியான இந்த பிரபஞ்சத்தில் குரு தான் தத்வஞானத்தை உண்டுபண்ணுகிறுர். குருவின் உபதேசம் இல்லாவிடில் ஞானம் ஏற்படுவதில்லை என்பது இதுவரையில் கண்ட அனுபவம். **(46)**

**(அவதாரிகை)** குருவின் உபதேசம் பெற்றவன் செய்ய வேண்டியதைக் கூறுகிறுர்: -

**अतो ब्रह्मात्मवस्यैक्यं ज्ञात्वा दृश्यमसत्तया ॥ ४७ ॥**

**அதோ ப்³ரஹ்மாத்மவஸ்யைக்யம் ஜ்ஞாத்வா த்³ருஶ்யமஸத்தயா ॥ 47 ॥**

**अद्वैते ब्रह्मणि स्थेयं प्रत्यग्ब्रह्मात्मना सदा ।**

**அத்³வைதே ப்³ரஹ்மணி ஸ்தே²யம் ப்ரத்யக்³ப்³ரஹ்மாத்மனு ஸதா³ ।**

| | | |
|---|---|---|
| **अत:**<br>**அத:** | = | ஆகையால், |
| **ब्रह्मात्मवस्यैक्यं**<br>**ப்³ரஹ்மாத்மவஸ்யைக்யம்** | = | ப்ரஹ்மம், ஆத்மா இந்த வஸ்துக்களின் அபேதத்தை, |
| **ज्ञात्वा**<br>**ஜ்ஞாத்வா** | = | (குருவின் உபதேசத்தால்) அறிந்து, |
| **दृश्यं**<br>**த்³ருஶ்யம்** | = | காணப்படும் பிரபஞ்சத்தை, |
| **असत्तया**<br>**அஸத்தயா** | = | பொய்யானதாக, |
| **ज्ञात्वा**<br>**ஜ்ஞாத்வா** | = | அறிந்து, |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |

| | | |
|---|---|---|
| **प्रत्यग्ब्रह्मात्मना** | = | ஜீவாபின்ன ப்ரஹ்மஸ்வரூபமாக, |
| **ப்³ரஹ்மாத்மனு** | | |
| **अद्वैते ब्रह्मणि** | = | அத்வைதமான ப்ரஹ்மத்தில், |
| **அத்³வைதே ப்³ரஹ்மணி** | | |
| **स्थेयं** | = | இருக்க வேண்டும். |
| **ஸ்தே²யம்** | | |

ச்ருதி, அனுபவம் இரண்டினுலும், குருவின் உபதேசம் பெறுதவனுக்கு ஞானம் வராது என்று நிச்சயமாகத் தெரிகிறபடியால் குருவைத்தேடி அடைந்து அவருடைய உபதேசத்தால், காணப்படும் பிரபஞ்சம் பொய் என்பதையும், ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்று என்பதையும் தெரிந்து கொண்டு, நானே ப்ரஹ்மம் என்ற பாவனையுடன் அத்வைத ப்ரஹ்மத்திலேயே மனதை நிலைநிறுத்தவேண்டும் அதாவது சிரவணமனனங்களுக்குப்பின் நிதித்யாஸனம் செய்ய வேண்டும். **(47)**

(**அவதாரிகை**) உபநிஷத்தின் தாத்பர்யத்தைக் கூறுகிறுர்: -

## तत्प्रत्यक्षात्परिज्ञातमद्वैतब्रह्मचिद्घनम् ॥ ४८ ॥

**தத்ப்ரத்யக்ஷாத்பரிஜ்ஞாதமத்³வைதப்³ரஹ்மசித்³த⁴னம் ॥ 48 ॥**

## प्रतिपाद्यं तदेवात्र वेदान्तैर्न द्वयं जडम् ।

**ப்ரதிபாத்³யம் ததே³வாத்ர வேதா³ந்தைர்ன த்³வயம் ஜட³ம் ।**

| | | |
|---|---|---|
| **चिद्घनं** | = | ஞானஸ்வரூபமான, |
| **சித்³த⁴னம்** | | |
| **तत्** | = | அந்த, |
| **தத்** | | |
| **अद्वैतब्रह्म** | = | ஒன்றுன ப்ரஹ்மம், |
| **அத்³வைதப்³ரஹ்ம** | | |
| **प्रत्यक्षात्** | = | பிரத்யக்ஷமாக, |
| **ப்ரத்யக்ஷாத்** | | |
| **परिज्ञातं** | = | அறியப்பட்டதாக ஆகிறது, |
| **பரிஜ்ஞாதம்** | | |
| **तदेव** | = | அதுதான், |
| **ததே³வ** | | |
| **अत्र** | = | இங்கு, |
| **அத்ர** | | |
| **वेदान्तैः** | = | உபநிஷத்துக்களால், |
| **வேதா³ந்தை:** | | |

**प्रतिपाद्यं** = கருத்துடன் விளக்கத்தக்கது,

**ப்ரதிபாத்³யம்**

**जडं** = ஜடமான,

**ஜட³ம்**

**द्वयं** = த்வைதம்,

**த்³வயம்**

**न** = இல்லை.

**ந**

குருவின் உபதேசத்தாலும் மனனநிதித்யாஸனங்களாலும் முடிவில் அத்வைத ப்ரஹ்ம சைதன்ய ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. எல்லா உபநிஷத்துக்களுக்கும் இந்த ப்ரஹ்ம ஸ்வரூபத்தைக் கூறுவதில்தான் தாத்பர்யம். ஜடமான த்வைத ப்ரபஞ்சத்தைக் கூறுவதில் தாத்பர்யமில்லை. **(48)**

(**அவதாரிகை**) சித்தையும் ஜடத்தையும் பிரித்துக் காட்டுகிறார்: -

## सुखरूपं चिदद्वैतं दुःखरूपमसज्जडम् ॥ ४९ ॥

**ஸுக²ரூபம் சித³த்³வைதம் து³:க²ரூபமஸஜ்ஜட³ம் ॥ 49 ॥**

## वेदान्तैस्तद्द्वयं सम्यक् निर्णीतं वस्तुतो नयात् ।

**வேதா³ந்தைஸ்தத்³த்³வயம் ஸம்யக் நிர்ணீதம் வஸ்துதோ நயாத் ।**

**अद्वैतं** = ஒன்றான,

**அத்³வைதம்**

**चित्** = சைதன்யம்,

**சித்**

**सुखरूपं** = ஆனந்த ரூபம்,

**ஸுக²ரூபம்**

**असत्** = பொய்யான,

**அஸத்**

**जडं** = ஜடப்பொருள்,

**ஜட³ம்**

**दुःखरूपम्** = துக்கரூபம்,

**து³:க²ரூபம்**

**तत् दूयं** = அவ்விரண்டும்,

**தத் தூ³யம்**

**नयात्** = யுக்தியினால்,

**நயாத்**

**वस्तुतः** = வஸ்து ஸ்வபாவத்தால்,
**வஸ்துத:**

**वेदान्तैः** = உபநிஷத்துக்களால்,
**வேதா³ந்தை:**

**सम्यक्** = நன்ருக,
**ஸம்யக்**

**निर्णीतं** = தீர்மானிக்கப்பட்டு இருக்கிறது.
**நிர்ணீதம்**

சைதன்யம் ஒன்று, அதுவே ஸத்யம் ஆனந்தரூபம். ஜடமான பிரபஞ்சம் பொய், துக்கரூபம். இவ்விஷயம் பல யுக்திகளேக்கொண்டும் வஸ்து ஸ்வபாவத்தைக்கொண்டும் உபநிஷத்துக்களில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. **(49)**

(**அவதாரிகை**) ஸத்யாஸத்ய விவேசனம் செய்கிருர்: -

**अद्वैतमेव सत्यं त्वं विद्धि द्वैतमसत्सदा ॥ ५० ॥**

**அத்³வைதமேவ ஸத்யம் த்வம் வித்³தி⁴ த்³வைதமஸத்ஸதா³ ॥ 50 ॥**

**शुद्धे कथमशुद्धः स्यात् दृश्यं मायामयं ततः ।**

**ஶுத்³தே⁴ கத²மஶுத்³த⁴: ஸ்யாத் த்³ருஶ்யம் மாயாமயம் தத: ।**

**अद्वैतमेव** = அத்வைதத்தையே,
**அத்³வைதமேவ**

**सत्यं** = உண்மையாகவும்,
**ஸத்யம்**

**द्वैतं** = த்வைதத்தை,
**த்³வைதம்**

**असत्** = பொய்யாகவும்,
**அஸத்**

**सदा** = எப்பொழுதும்,
**ஸதா³**

**त्वं** = நீ,
**த்வம்**

**विद्धि** = அறிந்துகொள்,
**வித்³தி⁴**

**शुद्धै** = சுத்தமான வஸ்துவில்,
**ஶுத்³வை**

| | | |
|---|---|---|
| **अशुद्धः** | = | அசுத்தமான பதார்த்தம், |
| **அஶுத்³த⁴:** | | |
| **कथं स्यात्** | = | எப்படிஇருக்கும்? |
| **கத²ம் ஸ்யாத்** | | |
| **ततः** | = | ஆகையால், |
| **தத:** | | |
| **दृश्यं** | = | காணப்படும் பிரபஞ்சம், |
| **த்³ருஶ்யம்** | | |
| **मायामयं** | = | மாயையால் ஏற்பட்டது (பொய்யானது.) |
| **மாயாமயம்** | | |

அத்வைதமே உண்மை, த்வைதம் பொய். இது எப்பொழுதும் உள்ள உண்மை. ப்ரஹ்மம்தான் எல்லாவற்றிற்கும் ஆதாரம். பிரபஞ்சமும் ப்ரஹ்மத்தில்தான் இருக்க வேண்டும் வேறு இடத்தில் இருக்கமுடியாது. ப்ரஹ்மமோ பரிசுத்த வஸ்து. அதில் அசுத்தமான பிரபஞ்சம் எப்படி இருக்கக்கூடும்? ஆகவே காணப்படும் பிரபஞ்சம் பொய்தான். **(50)**

**(அவதாரிகை)** பிரபஞ்சம் பொய் என்பதற்கு திருஷ்டாந்தம் கூறுகிறர்: -

## शुक्तौ रूप्यं मृषा यद्वत्तथा विश्वं परात्मनि ॥ ५१ ॥

**ஶுக்தௌ ரூப்யம் ம்ருஷா யத்³வத்ததா² விஶ்வம் பராத்மனி ॥ 51 ॥**

## विद्यते न स्वतः सत्त्वं नान्यतः सत्त्वमस्ति वा ।

**வித்³யதே ந ஸ்வத: ஸத்த்வம் நான்யத: ஸத்த்வமஸ்தி வா ।**

| | | |
|---|---|---|
| **यद्वत्** | = | எப்படி, |
| **யத்³வத்** | | |
| **शुक्तौ** | = | கிளிஞ்சலில், |
| **ஶுக்தௌ** | | |
| **रूप्यं** | = | வெள்ளி, |
| **ரூப்யம்** | | |
| **मृषा** | = | பொய்யாக உள்ளதோ, |
| **ம்ருஷா** | | |
| **तथा** | = | அப்படி, |
| **ததா²** | | |
| **विश्वं** | = | பிரபஞ்சம், |
| **விஶ்வம்** | | |

| | | |
|---|---|---|
| **परात्मनि**<br>**பராத்மனி** | = | ப்ரஹ்மத்தில், |
| **विद्यते**<br>**வித்³யதே** | = | (பொய்யாக) இருக்கிறது (அதற்கு), |
| **सत्त्वं**<br>**ஸத்த்வம்** | = | உண்மை, |
| **स्वतः**<br>**ஸ்வதஃ** | = | தாஞகவும், |
| **न**<br>**ந** | = | இல்ஜல, |
| **अन्यतः**<br>**அன்யதஃ** | = | மற்றவை மூலமாகவும், |
| **सत्त्वं**<br>**ஸத்த்வம்** | = | உண்மை, |
| **नास्ति हि**<br>**நாஸ்தி ஹி** | = | கிடையாதல்லவா. |

கிளிஞ்சஜலப் பார்த்து ப்ராந்தியால் வெள்ளி என நிஜனக்கிறுன். அவன் கண்ணுக்கு கிளிஞ்சல் தெரிவதில்ஜல. வெள்ளி தெரிகிறது. இந்த வெள்ளி உண்மை யல்ல. பொய்யானது இதற்குத் தாஞகவும் ஸத்வம் கிடையாது. காரணத்திலுள்ள தர்மங்கஜள கார்யத்தில் காண்பதுபோல் வேறென்றின் மூலமாகவும் இதற்கு ஸத்வம் சொல்ல முடியாது **(51)**

**(அவதாரிகை)** 'பொய்' என்பதை விளக்கிக் கூறுகிறுர்:

**बाध्यत्वान्नैव सद्वैतं नासत्प्रत्यक्षभानतः ॥ ५२ ॥**

**பா³த்⁴யத்வான்னைவ ஸத்³வைதம் நாஸத்ப்ரத்யக்ஷபா⁴னதஃ ॥ 52 ॥**

**सदसत्न विरुद्धत्वादतोऽनिर्वाच्यमेव तत् ।**

**ஸத³ஸத்ன விருத்³த⁴த்வாத³தோ(அ)நிர்வாச்யமேவ தத் ।**

| | | |
|---|---|---|
| **द्वैतं**<br>**த்³வைதம்** | = | வேற்றுமைகொண்ட பிரபஞ்சம், |
| **बाध्यत्वात्**<br>**பா³த்⁴யத்வாத்** | = | மறைந்துபோவதால், |
| **नैव सत्**<br>**நைவ ஸத்** | = | ஸத்தான (உண்மையான) பொருள் அல்ல, |

| | | |
|---|---|---|
| **प्रत्यक्षभानतः** | = | நேரில் தோன்றுவதால், |
| **ப்ரத்யக்ஷபா⁴னத꞉** | | |
| **नासत्** | = | இல்லாத பொருளும் அல்ல, |
| **நாஸத்** | | |
| **विरुद्धत्वात्** | = | ஒன்றுக்கொன்று விருத்தமாயிருப்பதால், |
| **விருத்³த⁴த்வாத்** | | |
| **न सदसत्** | = | ஸத்தாயும் அஸத்தாயும் உள்ள |
| **ந ஸத³ஸத்** | | பொருளும் அல்ல, |
| **अतः** | = | ஆகையால், |
| **அத꞉** | | |
| **तत्** | = | அது, |
| **தத்** | | |
| **अनिर्वाच्यमेव** | = | இன்னவிதம் என்று சொல்ல |
| **அநிர்வாச்யமேவ** | | முடியாததுதான். |

கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியைக் கடையில் உள்ள வெள்ளியைப்போல் ஸத்வஸ்து (உண்மைப் பொருள்) எனக்கூறமுடியாது ஏனெனில் 'இது கிளிஞ்சல்' என்ற உண்மை அறிவு ஏற்பட்டவுடன் இந்த வெள்ளி மறைந்துவிடுகிறது. உண்மைப் பொருளாயிருந்தால் ஞானத்தால் மறைந்து போகாது இதை அஸத் (இல்லவே இல்ஂல) என்றும் கூற முடியாது. ஏனெனில் நேரில் அதை பார்க்கிறோம். இல்லாததை எப்படிப் பார்க்கமுடியும்? ஸதஸத் (இருப்பும் இல்லாமையும் கலந்தது) என்றும் கூறமுடியாது. ஏனெனில் இரண்டும் ஒன்றுக்கொன்று விருத்தமானது. ஸத்தாயிருந் தால் அஸத்தாக இருக்காது. அஸத்தாயிருந்தால் ஸத்தாக இருக்காது. ஆகவே அது இன்னவிதம் என்று கூற முடியாத பொருள். இதுதான் பொய் என்பதற்கு அர்த்தம். இதேபோல பிரபஞ்சமும் ப்ரஹ்மஞானத்தால் மறைந்துபோவதாலும், நேரில் தோன்றுவதாலும் ஸத்தாகவோ அஸத்தாகவோ கூறமுடியாமலிருப்பதால் அநிர்வச னீயம். அதாவது பொய். அத்வைத ஸித்தாந்தத்தில் மித்யா (பொய்) என்பதற்கு 'இல்ஂல' என்று பொருள் அல்ல. உண்மையல்ல என்பதுதான் பொருள். அதனுல் அது தோன்றலாம். அதனுல் லோகவியவஹாரமும் நடக்கலாம். ஆனுலும் அது உண்மை யல்ல. **(52)**

**(அவதாரிகை)** இவ்வாறு பிரபஞ்சம் பொய் என்பதை யுக்திகளால் காட்டி நீ ப்ரஹ்மம் தான் என்று குரு உபதேசிக்கிறுர்: -

## यः पूर्वमेक एवासीत्सृष्ट्रा पश्चादिदं जगत् ॥ ५३ ॥

**ய꞉ பூர்வமேக ஏவாஸீத்ஸ்ருஷ்ட்ரா பஶ்சாதி³த³ம் ஜக³த் ॥ 53 ॥**

## प्रविष्टो जीवरूपेण स एवात्मा भवान् परः ।

**ப்ரவிஷ்டோ ஜீவரூபேண ஸ ஏவாத்மா ப⁴வான் பர꞉ ।**

| | | |
|---|---|---|
| यः<br>யː | = | எது, |
| पूर्व<br>பூர்வ | = | ஸிருஷ்டிக்கு முன்னால், |
| एक एव<br>ஏக ஏவ | = | ஒன்றாகவே, |
| आसीत्<br>ஆஸீத் | = | இருந்ததோ, |
| पश्चात्<br>பஶ்சாத் | = | பின்னால், |
| इदं जगत्<br>இத³ம் ஜக³த் | = | இந்த பிரபஞ்சத்தை, |
| सृष्ट्वा<br>ஸ்ருஷ்ட்வா | = | ஸிருஷ்டி செய்து, |
| जीवरूपेण<br>ஜீவரூபேண | = | ஜீவஸ்வரூபமாக, |
| प्रविष्टः<br>ப்ரவிஷ்டː | = | (சரீரத்திற்குள்) நுழைந்திருக்கிறதோ, |
| सः<br>ஸː | = | அந்த, |
| परः<br>பரː | = | பரமாத்மாதான், |
| भवान्<br>ப⁴வான் | = | நீ. |

ஸ்ருஷ்டிக்குமுன் ஒரே வஸ்துதான் இருந்தது அதற்கு ஸத் என்று பெயர். அது மாயையால் பிரபஞ்சத்தை ஸிருஷ்டி செய்தது. தான் ஸிருஷ்டித்த சரீரத்திற்குள் புகுந்து அது ஜீவனாக ஆகிவிட்டது ஆகவே முதலில் தான் ஒன்றாக இருந்ததும் பிரபஞ்சத்தை ஸிருஷ்டித்ததும், ஜீவ ஸ்வரூபமாக சரீரத்திற்குள் நுழைந்ததுமான அந்த பரமாத்மாதான் நீ என்று குரு சிஷ்யனுக்கு உபதேசிக்கிறார். **(53)**

**सच्चिदानन्द एव त्वं विस्मृत्यात्मतया परम् ॥ ५४ ॥**

**ஸச்சிதா³னந்த³ ஏவ த்வம் விஸ்ம்ருத்யாத்மதயா பரம் ॥ 54 ॥**

**जीवभावमनुप्राप्तः स एवात्मासि बोधतः ।**

**अद्वयानन्दचिन्मात्रः शुद्धः साम्राज्यमागतः ॥ ५५ ॥**

**ஜீவபா⁴வமனுப்ராப்த꞉ ஸ ஏவாத்மாஸி போ³த⁴த꞉ ।**
**அத்³வயானந்த³சின்மாத்ர꞉ ஶுத்³த⁴꞉ ஸாம்ராஜ்யமாக³த꞉ ॥ 55 ॥**

| | | |
|---|---|---|
| **त्वं** **த்வம்** | = | நீ, |
| **सच्चिदानन्द एव** **ஸச்சிதா³னந்த³ ஏவ** | = | ஸச்சிதானந்தமான பரப்ரஹ்மம் தான், |
| **आत्मतया** **ஆத்மதயா** | = | உன் ஆத்மாவாக இருக்கும், |
| **परं** **பரம்** | = | பரப்ரஹ்மத்தை, |
| **विस्मृत्य** **விஸ்ம்ருத்ய** | = | மறந்து, |
| **जीवभावं** **ஜீவபா⁴வம்** | = | ஜீவத்தன்மையை, |
| **अनुप्राप्तः** **அனுப்ராப்த꞉** | = | அடைந்துவிட்டாய். (இப்பொழுது) |
| **बोधतः** **போ³த⁴த꞉** | = | ஞானத்தால், |
| **अद्वयानन्दचिन्मात्रः** **அத்³வயானந்த³சின்மாத்ர꞉** | = | இரண்டற்றதும் ஆனந்தத்தையும் ஞானத்தையுமே ஸ்வரூபமாகக் கொண்டதும், |
| **शुद्धः** **ஶுத்³த⁴꞉** | = | பரிசுத்தமானதுமான, |
| **स एव आत्मा** **ஸ ஏவ ஆத்மா** | = | அந்தப் பரமாத்மாவாகவே, |
| **असि** **அஸி** | = | இருக்கிறுய், |
| **साम्राज्यं** **ஸாம்ராஜ்யம்** | = | மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை, |
| **आगतः** **ஆக³த꞉** | = | அடைந்துவிட்டாய், |

நீ உண்மையில் ஸச்சிதானந்தஸ்வரூபம்தான். பரமாத்மாதான் உன் ஸ்வரூபம். ஆனுலும் இதை மறந்து தேஹாதிகளுடன் சேர்ந்து ஜீவனுக ஆய்விட்டாய். இப்பொழுது உண்மையை அறிந்து ஜீவபாவத்தை மறந்து பரமாத்மஸ்வரூபமாக இருக்கிறுய் இது இரண்டற்றது. ஞானமும் ஆனந்தமுமே அதன் ஸ்வரூபம், பரிசுத்த வஸ்து. இப்பொழுது இந்த ஸ்வரூபமாக விளங்குவதால் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடைந்துவிட்டாய். **(54-55)**

(**அவதாரிகை**) ஸச்சிதானந்த வஸ்துவில் கர்த்ருத்வாதி தர்மங்கள் ஏற்பட்ட விதத்தை சாந்தோக்யத்தில் உள்ள கதையைக் கூறி விவரிக்கிறார்: -

## कर्तृत्वादीनि यान्यासंस्त्वयि ब्रह्माद्वये परे ।
## तानीदानीं विचार्यन्ते किंस्वरूपाणि वस्तुतः ॥ ५६ ॥

**கர்த்ருத்வாதீ³னி யாந்யாஸம்ஸ்த்வயி ப்³ரஹ்மாத்³வயே பரே ।**
**தானீதா³னீம் விசார்யந்தே கிம்ஸ்வரூபாணி வஸ்துத꞉ ॥ 56 ॥**

| | | |
|---|---|---|
| **ब्रह्माद्वये** ப்³ரஹ்மாத்³வயே | = | இரண்டற்ற ப்ரஹ்மமாயும், |
| **परे** பரே | = | எல்லாவற்றிற்கும் மேல்பட்டவனுயும் உள்ள, |
| **त्वयि** த்வயி | = | உன்னிடத்தில், |
| **कर्तृत्वादीनि** கர்த்ருத்வாதீ³னி | = | கர்த்ருத்வம் முதலிய, |
| **यानि** யானி | = | எந்த தர்மங்கள், |
| **आसन्** ஆஸன் | = | இருந்தனவோ, |
| **तानी** தானீ | = | அவைகள், |
| **वस्तुतः** வஸ்துத꞉ | = | உண்மையில், |
| **किंस्वरूपाणि** கிம்ஸ்வரூபாணி | = | எத்தகைய ஸ்வரூபமுள்ளவை என்று, |
| **इदानीं** இதா³னீம் | = | இப்பொழுது, |
| **विचार्यन्ते** விசார்யந்தே | = | விசாரிக்கப்படுகின்றன. |

உண்மையில் நீ அத்விதீயமான ப்ரஹ்ம வஸ்துவாயிருந்தாலும் இதுவரை உன்னிடம் கர்த்ருத்வாதி தர்மங்கள் இருந்தன. தன்னைக் கர்த்தாவாகவும், போக்தாவாகவும் எண்ணிக்கொண்டிருந்தாய். இவைகளின் உண்மை ஸ்வரூபத்தையும், இவை வந்தவிதத்தையும் விசாரிப்போம். **(56)**

## अत्रैव शृणु वृत्तान्तमपूर्वं श्रुतिभाषितम् ।

**அத்ரைவ ஶ்ருணு வ்ருத்தாந்தமபூர்வம் ஶ்ருதிபா⁴ஷிதம் ।**

| | | |
|---|---|---|
| अत्रैव<br>அத்ரைவ | = | இவ்விஷயத்திலேயே, |
| श्रुतिभाषितं<br>ஶ்ருதிபா⁴ஷிதம் | = | உபநிஷத்தில் கூறப்பட்ட, |
| अपूर्वं<br>அபூர்வம் | = | புதியதான, |
| वृत्तान्तं<br>வ்ருத்தாந்தம் | = | கதையை, |
| शृणु<br>ஶ்ருணு | = | கேள். |

இந்த விஷயத்தில் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆறுவது அத்யாயத்தில் ஆருணி ச்வேதகேதுவுக்கு தத்வமஸி மஹா வாக்யத்தை உபதேசிக்கும்பொழுது சொன்ன கதையைச் சொல்கிறேன். கேள்.

**कश्चिद्गान्धारदेशीयो महारत्नविभूषितः ॥ ५७॥**

**கஶ்சித்³கா³ந்தா⁴ரதே³ஶீயோ மஹாரத்னவிபூ⁴ஷித꞉ ॥ 57॥**

**स्वगृहे स्वाङ्गणे सुप्तः प्रमत्तः सन् कदाचन ।**

**ஸ்வக்³ருஹே ஸ்வாங்க³ணே ஸுப்த꞉ ப்ரமத்த꞉ ஸன் கதா³சன ।**

| | | |
|---|---|---|
| कदाचन<br>கதா³சன | = | ஒரு சமயம், |
| गान्धारदेशीयः<br>கா³ந்தா⁴ரதே³ஶீய꞉ | = | காந்தார தேசத்தில் வஸிக்கும், |
| कश्चित्<br>கஶ்சித் | = | ஒருவன், |
| महारत्नविभूषितः<br>மஹாரத்னவிபூ⁴ஷித꞉ | = | சிறந்த ரத்னங்களால் அலங்கரிக்கப் பட்டவனுக, |
| स्वगृहे<br>ஸ்வக்³ருஹே | = | தன் வீட்டில், |
| स्वाङ्गणे<br>ஸ்வாங்க³ணே | = | தன் அறையில், |
| प्रमत्तः सन्<br>ப்ரமத்த꞉ ஸன் | = | கவனக் குறைவுள்ளவனுய்க்கொண்டு, |
| सुप्तः<br>ஸுப்த꞉ | = | தூங்கினுன். |

ஒரு சமயம் காந்தாரம் என்னும் தேசத்தில் பெரிய தனிகன் ஒருவன் விலையுயர்ந்த ரத்னாபரணங்களாலும் தங்க நகைகளாலும் தன்னை அலங்கரித்துக் கொண்டு தன் வீட்டில் தன் அறையில் இரவில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். அஜாகரதையால் வீட்டில் சரியாக பந்தோபஸ்து செய்து கொள்ளாமல் தூங்கினான்.

**(57)**

**रात्रौ चोरैः समागत्य भूषणानां प्रलोभितैः ॥ ५८॥**

**ராத்ரௌ சோரை: ஸமாக³த்ய பூ⁴ஷணானாம் ப்ரலோபி⁴தை: ॥ 58॥**

**बध्त्वा देशान्तरं चोरैर्नीतः सन्गहने वने ।**
**भूषणान्यपहृत्यापि बद्धाक्षकरपादकः ॥ ५९॥**

**ப³த்⁴த்வா தே³ஶாந்தரம் சோரைர்னீத: ஸன்க³ஹனே வனே ।**
**பூ⁴ஷணான்யபஹ்ருத்யாபி ப³த்³தா⁴க்ஷகரபாத³க: ॥ 59॥**

**निक्षिप्तो विपिनेऽतीव कुशकण्टकवृश्चिकैः ।**
**व्याळव्याघ्रादिभिश्चैव संकुले तरुसंकटे ॥ ६० ॥**

**நிக்ஷிப்தோ விபினே(அ)தீவ குஶகண்டகவ்ருஶ்சிகை: ।**
**வ்யாளவ்யாக்⁴ராதி³பி⁴ஶ்சைவ ஸங்குலே தருஸங்கடே ॥ 60 ॥**

| | | |
|---|---|---|
| **रात्रौ**<br>**ராத்ரௌ** | = | இரவில், |
| **भूषणानां प्रलोभितैः**<br>**பூ⁴ஷணானாம் ப்ரலோபி⁴தை:** | = | நகைகளில் பேராசை கொண்ட, |
| **चोरैः**<br>**சோரை:** | = | திருடர்களால், |
| **समागत्य**<br>**ஸமாக³த்ய** | = | வந்து, |
| **बध्त्वा**<br>**ப³த்⁴த்வா** | = | கட்டி, |
| **देशान्तरं चोरैर्नीतः सन्**<br>**தே³ஶாந்தரம் சோரைர்னீத: ஸன்** | = | வேறு தேசத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டவனாய்க் கொண்டு, |
| **गहने वने**<br>**க³ஹனே வனே** | = | உட்புகமுடியாத அடர்ந்தகாட்டில், |
| **भूषणानि**<br>**பூ⁴ஷணானி** | = | நகைகளை, |
| **अपहृत्यापि**<br>**அபஹ்ருத்யாபி** | = | திருடியும், |

| | | |
|---|---|---|
| **चोरैः**<br>**சோரை:** | = | திருடர்களால், |
| **बद्धाक्षकरपादकः**<br>**ப³த்³தா⁴க்ஷகரபாத³க:** | = | கண்கள், கை, கால்கள் கட்டப்பட்டவனாய், |
| **अतीव**<br>**அதீவ** | = | மிகவும், |
| **कुशकण्टकवृश्चिकैः**<br>**குஶகண்டகவ்ருஶ்சிகை:** | = | தர்ப்பை, முள், தேள் இவைகளாலும், |
| **व्यालव्याघ्रादिभिश्चैव**<br>**வ்யாலவ்யாக்⁴ராதி³பி⁴ஶ்சைவ** | = | பாம்பு, புலி முதலியவைகளாலும், |
| **संकुले**<br>**ஸங்குலே** | = | நிறைந்ததும், |
| **तरुसंकटे**<br>**தருஸங்கடே** | = | மரங்கள் நிறைந்ததுமான, |
| **विपिने**<br>**விபினே** | = | காட்டில் தள்ளப்பட்டான். |

அன்று இரவில அந்த வீட்டிற்குள பல திருடர்கள் புகுந்து, நகைகளை உடம்பில் அணிந்துகொண்டு இவன் அயர்ந்து தூங்குவதைப் பார்த்து, அந்த நகைகளைத் தாம் அடையவேண்டும் என்ற பேராசையால் தூண்டப்பட்டு, கயிற்றால் அவனைக்கட்டி, கை கால்களையும் கண்களையும் கட்டி, வேறு தேசத்திலுள்ள பயங்கரமான காட்டிற்கு எடுத்துச் சென்று, நகைகளையெல்லாம் அவனிடமிருந்து பறித்துக்கொண்டு புலி, பாம்பு, தேள், முள், தர்ப்பை முதலியவை நிறைந்ததும் மரங்களால் அடர்த்தியானதுமான அந்த நடுக் காட்டில் அவனை அப்படியே விட்டு விட்டுத்திருடர்கள் தம் இடம் சென்றனர். **(58 - 60)**

**व्यालादिदुष्टसत्वेभ्यो महारण्ये भयातुरः ।**
**शिलाकण्टकदर्भाद्यैर्देहस्य प्रतिकूलकैः ॥ ६१ ॥**

**வ்யாளாதி³து³ஷ்டஸத்வேப்⁴யோ மஹாரண்யே ப⁴யாதுர: ।**
**ஶிலாகண்டகத³ர்பா⁴த்³யைர்தே³ஹஸ்ய ப்ரதிகூலகை: ॥ 61 ॥**

**क्रियमाणे विलुठने विशीर्णाङ्गोऽसमर्थकः ।**
**क्षुत्तृडातपवाय्वग्न्यादिभिस्तप्तोऽतितापकैः ॥ ६२ ॥**

**க்ரியமாணே விலுட²னே விஶீர்ணாங்கோ³(அ)ஸமர்த²க: ।**
**க்ஷுத்த்ருடா³தபவாய்வக்³ன்யாதி³பி⁴ஸ்தப்தோ(அ)திதாபகை: ॥ 62 ॥**

**बन्धमुक्तौ तथा देशप्राप्तावेव सुदुःखधीः ।**
**ददृशे कंचिदाक्रोशन्नेकं तत्रैव तस्थिवान् ॥ ६३ ॥**

**ப³ந்த⁴முக்தெள ததா² தே³ஶப்ராப்தாவேவ ஸுது³:க²தீ⁴: ।**
**த³த்³ருஶே கஞ்சிதா³க்ரோஶன்னேகம் தத்ரைவ தஸ்தி²வான் ॥ 63 ॥**

| | | |
|---|---|---|
| **महारण्ये** மஹாரண்யே | = | பெரிய காட்டில், |
| **व्यालादिदुष्टसत्वेभ्यः** வ்யாளாதி³து³ஷ்டஸத்வேப்⁴ய: | = | பாம்பு முதலான துஷ்ட பிராணிகளிடமிருந்து, |
| **भयातुरः** ப⁴யாதுர: | = | பயத்தால் துன்பமடைந்தவனாய், |
| **विलुठने क्रियमाणे** விலுட²னே க்ரியமாணே | = | புரளும்பொழுது, |
| **देहस्य** தே³ஹஸ்ய | = | உடலுக்கு, |
| **प्रतिकूलकैः** ப்ரதிகூலகை: | = | தீங்கு விளைவிக்கின்ற, |
| **शिलाकण्टकदर्भाद्यैः** ஶிலாகண்டகத³ர்பா⁴த்³யை: | = | கல், முள், தர்ப்பை முதலியவைகளால், |
| **विशीर्णाङ्गः** விஶீர்ணாங்க³: | = | சிதைந்த அவயவங்களை உடையவனாக, |
| **असमर्थकः** அஸமர்த²க: | = | பலமில்லாதவனாய், |
| **अतितापकैः** அதிதாபகை: | = | மிகுந்த தாபத்தைக் கொடுக்கும், |
| **क्षुत्तृडातपवाय्वग्न्यादिभिः** க்ஷுத்த்ருடா³தபவாய்வக்³ன்யாதி³பி⁴: | = | பசி, தாகம், வெய்யில், காற்று, நெருப்பு முதலியவைகளால், |
| **तप्तः** தப்த: | = | துன்பம் அடைந்தவனாய், |
| **सुदुःखधीः** ஸுது³:க²தீ⁴: | = | மனத்தில் மிகுந்த துக்கம் அடைந்தவனாக, |
| **बन्धमुक्तौ** ப³ந்த⁴முக்தெள | = | கட்டிலிருந்துவிடுபடவும், |
| **तथा** ததா² | = | அவ்விதமே, |

| | | |
|---|---|---|
| **देशप्राप्तावेव** <br> **தே³ஶப்ராப்தாவேவ** | = | தன் தேசத்தை அடைவதற்காகவுமே, |
| **कंचित् एकं** <br> **கஞ்சித் ஏகம்** | = | யாராவது ஒருவரைக் குறித்து, |
| **आकोशन्** <br> **ஆகோஶன்** | = | கத்திக்கொண்டு, |
| **तत्रैव** <br> **தத்ரைவ** | = | அங்கேயே, |
| **तस्थिवान्** <br> **தஸ்தி²வான்** | = | இருந்தவனுக, |
| **ददृशे** <br> **த³த்³ருஶே** | = | காணப்பட்டான். |

நடுக்காட்டில் தனியாக விடப்பட்ட அந்த காந்தார தேச புருஷனுக்கு தேள், பாம்பு கடித்துவிடுமோ, அல்லது புலி, சிங்கம் முதலான கொடிய மிருகங்கள் கொன்று விடுமோ என்று மனதில் மிகுந்த பயமேற்பட்டுவிட்டது. கைகால்கள் கட்டப்பட்டிருப்பதால் படுத்தபடியே அங்குமிங்கும் புரளும்பொழுது கல்களும், முள்களும், கூர்மையான தாப்பைகளும் உடலில்பட்டு சிராய்த்து ரக்தம்பெருகி, ஒவ்வொரு அவயவத்திலும் மிகுந்த வலியுடன் உடல் சோர்ந்து பலம் குன்றி விட்டது. இத்துடன் பசி ஒரு பக்கம் தாகம் ஒரு பக்கம் சேர்ந்துவிட்டது. மேலே வெய்யில், சூறுவளிக்காற்று, காட்டுத்தீ எல்லாம் சேர்ந்து பொறுக்க முடியாத துன்பங் களால் வாடி வதங்கிவிட்டான். கட்டு அவிழ்ந்து தன் ஊர் போய்ச்சேர்வதைத் தவிற வேறு ஒன்றிலும் அவன் மனம் செல்லவில்லை. யாராவது இரக்கமுள்ள ஒரு மஹாத்மா தற்செயலாக அங்குவந்து தான்படும் துன்பங்களைக்கண்டு மனம் இரங்கி தன் கட்டுக்களை அவிழ்த்து தன் ஊருக்கு அழைத்துச்செல்லமாட்டாரா என்று எண்ணினுன். தான் நடுக்காட்டில் தனியாக இருப்பது பிறருக்குத் தெரிவதற்காக "திருடர்களால் கை, கால்கள், கண்கள் கட்டப்பட்டு நடுக்காட்டில் தனியாக விடப் பட்டுத் தவிக்கிறேன். என்னைக் காப்பாற்றுங்கள்" என்று இரைந்து கத்திக் கதறுகிறுன். **(61 - 63)**

## तथा रागादिभिर्वर्गैः शत्रुभिर्दुःखदायिभिः ।
## चौरैर्देहाभिमानाद्यैः स्वानन्दधनहारिभिः ॥ ६४॥

**ததா² ராகா³தி³பி⁴ர்வர்கை³ஃ ஶத்ருபி⁴ர்து³꞉க²தா³யிபி⁴꞉ ।**
**சோரைர்தே³ஹாபி⁴மாநாத்³யை꞉ ஸ்வானந்த³த⁴னஹாரிபி⁴꞉ ॥ 64॥**

## ब्रह्मानन्दे प्रमत्तः स्वाज्ञाननिद्रावशीकृतः ।
## बद्धस्त्वं बन्धनैर्भोगतृष्णाज्वरादिभिर्दृढम् ॥ ६५॥

**ப்³ரஹ்மானந்தே³ ப்ரமத்த꞉ ஸ்வாஜ்ஞானநித்³ராவஶீக்ருத꞉ ।**
**ப³த்³த⁴ஸ்த்வம் ப³ந்த⁴னைர்போ⁴க³த்ருஷ்ணஜ்வராதி³பி⁴ர்த்³ருட⁴ம் ॥ 65॥**

| | | |
|---|---|---|
| तथा<br>ததா² | = | அவ்விதமே, |
| ब्रह्मानन्दे<br>ப்³ரஹ்மானந்தே³ | = | ப்ரஹ்மானந்தத்தில், |
| प्रमत्तः<br>ப்ரமத்த: | = | கவனக் குறைவுள்ளவனாகவும், |
| स्वाज्ञाननिद्रावशीकृतः<br>ஸ்வாஜ்ஞானநித்³ராவஶீக்ருத: | = | தன் அக்ஞானம் என்னும் நித்ரைக்கு வசமாக்கப்பட்டவனாகவும் உள்ள, |
| त्वं<br>த்வம் | = | நீ, |
| दुःखदायिभिः<br>து³:க²தா³யிபி⁴: | = | துன்பத்தைத் தருகின்ற, |
| रागादिभिः<br>ராகா³தி³பி⁴ | = | ஆசை முதலிய, |
| शत्रुभिः वर्गैः<br>ஶத்ருபி⁴: வர்கை³: | = | எதிரிக் கூட்டங்களாலும், |
| स्वानन्दधनहारिभिः<br>ஸ்வானந்த³த⁴னஹாரிபி⁴: | = | தன் ஆனந்தம் பணத்தைப் பறிக்கின்ற, |
| देहाभिमानाद्यैः<br>தே³ஹாபி⁴மாநாத்³யை: | = | தேஹத்தில் அபிமானம் முதலிய, |
| चोरैः<br>சோரை: | = | திருடர்களாலும், |
| भोगतृष्णाज्वरादिभिः<br>போ⁴க³த்ருஷ்ணாஜ்வராதி³பி⁴: | = | போகங்களில் ஆசை, தாபம் முதலிய, |
| बन्धनै<br>ப³ந்த⁴னை | = | கட்டுகளால், |
| दृढं<br>த்³ருட⁴ம் | = | உறுதியாக, |
| बद्धः<br>ப³த்³த⁴ | = | கட்டப்பட்டிருக்கிறாய். |

காந்தார புருஷனின் நிலைமையை திருஷ்டாந்தமாகக் கூறி இந்த பிரபஞ்சத்தில் ஸம்ஸாரிகள் ஒவ்வொருவரும் அவனுடைய நிலையிலேயே இருப்பதாகக் காட்டுகிறார். அவன் விலையுயர்ந்த சிறந்தரத்னங்களை அணிந்துகொண்டு அதில் கவனக் குறைவாக இருந்ததுபோல நாமும் நம்மிடமுள்ள உயர்ந்த ப்ரஹ்மானந்தத்தில் கவனக்குறைவாக இருக்கிறோம். அவனுக்குத் தூக்கத்தால் ரத்னத்தில் கவனமில்லாமல் இருந்தது நாம் நம் ஸ்வரூபத்தை அறியாமலிருப்பது என்ற தூக்கத்திற்கு வசமாகிவிட்டபடியால் ப்ரஹ்மானந்தத்தில நமக்கு ஞாபகமே இல்லை. நம்மிடம்

ப்ரஹ்மானந்தம் இருந்தும் நம் ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளாததால் ப்ரஹ்மானந்தம் நமக்குத் தெரியவில்லை. இந்த நிலையில் இந்த ஆனந்தம் என்னும் ரத்னத்தைத் திருடுவதற்காக தேஹாபிமானம் முதலிய திருடர்கள் நம்மிடம வருகின்றனர். காமம், கரோதம், லோபம், மோஹம், மதம், மாதஸர்யம் என்ற ஆறு பேர்களும் நமக்கு எதிரிகள். இவர்களை அரிஷட்வர்க்கம் எனக்கூறுவார்கள். இவர்கள் எப்பொழுதும் நமக்குத் துன்பம் செய்கின்றனர். இவர்கள் தான் திருடர்களை அனுப்புகின்றனர். இந்தத் திருடர்கள் நம்மிடம் வந்து விஷயங்களை அனுபவிப்பதில் ஆசை, தாபம் முதலிய கயிறுகளால் உறுதியாக நம்மைக் கட்டி விட்டனர் அதாவது நாம் ஆத்ம வஸ்துவைத் தெரிந்துகொள்ளவில்லை அக்ஞானத்தால் நம்மிடமுள்ள ப்ரஹ்மானந்தம் நமக்குத் தெரியவில்லை. அக்ஞானத்தால் உலகைப் பலவாறுகக் காண்பதால், விருப்பம், கோபம், பேராசை, மதிமயக்கம், காவம், அஸூயை, முதலான தோஷங்கள் நம்மிடம் குடிகொள்கின்றன. தேஹம், மனைவி, புத்ரன், பணம் இவற்றில் அபிமானம் நிலைக்கிறது. இந்த அபிமானத்தால் விஷயங்களைத் தேடிச்சேர்த்து இந்த இன்பத்தை நுகரவேண்டும் என்ற ஆசையால் இதிலேயே முழுவதும் ஈடுபட்டு நிற்கிறோம். உலக விஷயங்களில நாம் கட்டுப்பட்டுவிட்டோம். **(64-65)**

**अद्वयानन्दरूपात्त्वां प्रच्याव्यातीव धूर्तकैः ।**
**दूरनीतोऽसि देहेषु संसारारण्यभूमिषु ॥ ६६ ॥**

**அத்³வயானந்த³ரூபாத்த்வாம் ப்ரச்யாவ்யாதீவ தூ⁴ர்தகைः ।**
**தூ³ரனீதோ(அ)ஸி தே³ஹேஷு ஸம்ஸாராரண்யபூ⁴மிஷு ॥ 66 ॥**

**धूर्तकैः** / **தூ⁴ர்தகைः** = வஞ்சகர்களான காமன் முதலியவர்களால்,

**अद्वयानन्दरूपात्** / **அத்³வயானந்த³ரூபாத்** = பேதமில்லாத ஆனந்த ஸ்வரூபத்திலிருந்து,

**त्वां** / **த்வாம்** = உன்னை,

**अतीव** / **அதீவ** = மிகவும்,

**प्रच्याव्य** / **ப்ரச்யாவ்ய** = நழுவும்படி செய்து,

**संसारारण्यभूमिषु** / **ஸம்ஸாராரண்யபூ⁴மிஷு** = ஸம்ஸாரம் என்ற காட்டுப் பிரதேசங்களில்,

**देहेषु** / **தே³ஹேஷு** = சரீரங்களில்,

**दूरनीतोऽसि** / **தூ³ரனீதோ(அ)ஸி** = வெகு தூரம் எடுத்துச் செல்லப் பட்டிருக்கிறாய்.

தன் ஊரில் தன் வீட்டில் ஸுகமாகத் தூங்கிக் கொண்டிருந்த புருஷனை வெகு தூரத்திலுள்ள காட்டிற்குத் திருடர்கள் எடுத்துச் சென்றதுபோல வஞ்சகர்களான காமாதிகள் எல்லோரும் சேர்ந்து, உண்மையில் நீ பரமானந்த ஸ்வரூபமாக இருந்தும் அதை மறக்கச் செய்து ஸம்ஸாரம் என்னும் பெரிய காட்டிற்கு உன்னைக் கொண்டு வந்து விட்டனர். ஸம்ஸாரநிலையும் மோக்ஷ நிலையும் ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையானதால் வெகு தொலைவில் உள்ளதாகக் கூறுகிறார். **(66)**

## सर्वदुःखनिदानेषु शरीरादित्रयेषु च ।
## नानायोनिषु कर्मान्धवासनानिर्मितासु च ॥ ६७ ॥

**ஸர்வது³:க²நிதா³னேஷு ஶரீராதி³த்ரயேஷு ச ।**
**நானாயோநிஷு கர்மாந்த⁴வாஸனாநிர்மிதாஸு ச ॥ 67 ॥**

## प्रवेशितोऽसि सृष्टोऽसि बद्धस्वानन्ददृष्टितः ।

**ப்ரவேஶிதோ(அ)ஸி ஸ்ருஷ்டோ(அ)ஸி ப³த்³த⁴ஸ்வானந்த³த்³ருஷ்டித: ।**

| | | |
|---|---|---|
| **सर्वदुःखनिदानेषु** ஸர்வது³:க²நிதா³னேஷு | = | எல்லாத்துன்பங்களுக்கும் மூல காரணமான, |
| **शरीरादित्रयेषु च** ஶரீராதி³த்ரயேஷு ச | = | ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று சரீரங்களிலும், |
| **कर्मान्धवासनानिर्मितासु** கர்மாந்த⁴வாஸனாநிர்மிதாஸு | = | கர்மாக்களைச் செய்வதால் ஏற்பட்ட ஸூக்ஷ்மமான ஸம்ஸ்காரம் என்னும் வாஸனையால் உண்டுபண்ணப்பட்ட, |
| **नानायोनिषु च** நானாயோநிஷு ச | = | மற்றும் பல பிறவிகளிலும், |
| **प्रवेशितोऽसि** ப்ரவேஶிதோ(அ)ஸி | = | நுழையும்படி செய்யப்பட்டிருக்கிறாய், |
| **बद्धस्वानन्ददृष्टितः** ப³த்³த⁴ஸ்வானந்த³த்³ருஷ்டித: | = | தன் ஸ்வரூபமான ஆத்மானந்த த்ருஷ்டி மறைக்கப்பட்டு விட்டதால், |
| **सृष्टोऽसि** ஸ்ருஷ்டோ(அ)ஸி | = | ஸிருஷ்டிக்கப்பட்டவனாக இருக்கிறாய். |

ஸம்ஸாரம் என்னும் காட்டில் சரீரம் என்னும் குஹையில் ஜீவனை அடைத்து விட்டனர். இந்தச் சரீரம் தான் எல்லாத் துன்பங்களுக்கும் இருப்பிடம். இதில் ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்று மூன்று சரீரங்கள் இருப்பதால் எளிதாக வெளியில் வரமுடியாது. தான் ஆனந்த ரூபன் என்ற உண்மை அறிவு மறைக்கப் பட்டு விட்டது. சரீராதிகளில் நான் என்ற அபிமானம் வேரூன்றி விட்டது. சரீரத்தால் பற்பலவிதமான கர்மாக்களைச் செய்கிறான். இந்தக் கர்மாக்கள் ஸூக்ஷ்ம ரூபமாக இவன் மனதில் இருந்து கொண்டு மேலும் மேலும் பலவிதமான பிறவிகளைக் கொடுத்துக்கொண்டே இருக்கின்றன. இந்த சரீரம் போனால் வேறொரு சரீரம்;

அதுபோனால் மற்றொரு சரீரம்; இவ்விதம் முடிவில்லாமல் பரம்பரையாக சரீரம் வந்துகொண்டேயிருக்கிறது. **(67)**

## अनादिकालमारभ्य दुःखं चानुभवन्सदा ॥ ६८ ॥

**அநாதி³காலமாரப்⁴ய து³:க²ம் சானுப⁴வன்ஸதா³ ॥ 68 ॥**

## जन्ममृत्युजरादोष नरकादिपरम्पराम् ।
## निरन्तरं विषण्णोऽनुभवन्नत्यन्तशोकवान् ॥ ६९ ॥

**ஜன்மம்ருத்யுஜராதோ³ஷ நரகாதி³பரம்பராம் ।**
**நிரந்தரம் விஷண்ணோ(அ)னுப⁴வன்னத்யந்தஶோகவான் ॥ 69 ॥**

| | | |
|---|---|---|
| **अनादिकालमारभ्य**<br>**ஜன்மம்ருத்யுஜராதோ³ஷ** | = | அநாதிகாலமாக, |
| **सदा**<br>ஸதா³ | = | எப்பொழுதும், |
| **दुःखं**<br>**து³:க²ம்** | = | துன்பத்தை, |
| **अनुभवन्**<br>**அனுப⁴வன்** | = | அனுபவித்துக் கொண்டும், |
| **जन्ममृत्युजरादोष नरकादिपरम्पराम्**<br>**ஜன்மம்ருத்யுஜராதோ³ஷ**<br>**நரகாதி³பரம்பராம்** | = | பிறவி, மரணம், மூப்பு, ராகத்வேஷாதி தோஷங்கள், நரகம் முதலியவைகளின் பரம்பரையை, |
| **अनुभवन् च**<br>**அனுப⁴வன் ச** | = | அனுபவித்துக் கொண்டும், |
| **अत्यन्तशोकवान्**<br>**அத்யந்தஶோகவான்** | = | மிகுந்த சோகத்துடன் கூடியவனாக, |
| **निरन्तरं**<br>**நிரந்தரம்** | = | இடைவிடாமல், |
| **विषण्णः**<br>**விஷண்ண:** | = | வருந்தியவனாக இருக்கிறாய். |

நமக்கு இந்த பிறவித் துன்பம் எப்பொழுது முதன் முதலில் ஆரம்பித்தது என்பதை யாரும் சொல்லமுடியாது. அனாதிகாலமாக அநுபவித்து வருகிறோம். இதற்கு முடிவே இல்லை. ஒன்று போனால் மற்றொன்று வந்து விடுகிறது. பிறவியே துக்கம், பிறகு பால்ய யௌவனாதிகளில் துக்கம், பிறகு மூப்பு, மரணம். சரீரத்தை விட்டுச் சென்றால் நரகம், மறுபடியும் வேறொரு சரீரத்துடன் பிறப்பு இவ்வாறு பரம்பரையாக வெகு காலமாக சோகத்தால் மிகவும் துன்புறுகிறான். **(68-69)**

**अविद्याभूतबन्धस्य निवृत्तौ दुःखदस्य च ।**
**स्वरूपानन्दसंप्राप्तौ सत्योपायं न लब्धवान् ॥ ७० ॥**

**அவித்³யாபூ⁴தப³ந்த⁴ஸ்ய நிவ்ருத்தௌ து³:க²த³ஸ்ய ச ।**
**ஸ்வரூபானந்த³ஸம்ப்ராப்தௌ ஸத்யோபாயம் ந லப்³த⁴வான் ॥ 70 ॥**

**दुःखदस्य** = துன்பத்தைத் தருகின்ற,
**து³:க²த³ஸ்ய**

**अविद्याभूतबन्धस्य** = அக்ஞானத்தால் ஏற்பட்ட கட்டு,
**அவித்³யாபூ⁴தப³ந்த⁴ஸ்ய**

**निवृत्तौ** = விலகவும்,
**நிவ்ருத்தௌ**

**स्वरूपानन्दसंप्राप्तौ च** = தன் ஸ்வரூபமான ஆனந்தத்தை அடையவும்,
**ஸ்வரூபானந்த³ ஸம்ப்ராப்தௌ ச**

**सत्योपायं** = உண்மையான உபாயத்தை,
**ஸத்யோபாயம்**

**न लब्धवान्** = அடையவில்லை.
**ந லப்³த⁴வான்**

மிகுந்த துக்கத்தைக் கொடுக்கும் ஸம்ஸாரபந்தம் விலக நமக்குத் தெரிந்த உபாயங்களைச் செய்து பார்க்கிறோம். மேலும் துன்பம் பெருகுகிறதே தவிற குறைவதாகக்காணோம் உண்மையாயிருந்தால் ஏதாவது உபாயத்தால் நீங்கும். இதுவோ அக்ஞானத்தால் ஏற்பட்டது. ஆகவே பந்தம் விலகவும் நம் ஸ்வரூபமான நித்யானந்தத்தை அடையவும் உண்மையான உபாயத்தை நாம் தெரிந்து கொள்ளவில்லை. **(70)**

**(அவதாரிகை)** இவ்வாறு காந்தார புருஷ திருஷ்டாந்தத்தையும் ஸம்ஸாரியின் நிலையையும் காட்டி திருஷ்டாந்தத்தில் அவன் ஊர் போய் ஸ்வஸ்தன் ஆவதைக் கூறுகிறார்: -

**यथा गान्धारदेशीयश्चिरं दैवाद्दयालुभिः ।**
**कैश्चित्पान्थैः परिप्राप्तैर्मुक्तदृष्ट्यादिवन्धनः ॥ ७१ ॥**

**யதா² காந்தா⁴ரதே³ஶீயஸ்சிரம் தை³வாத்³த³த்³யாலுபி⁴: ।**
**கைஶ்சித்பாந்தை²: பரிப்ராப்தைர்முக்தத்³ருஷ்ட்யாதி³வந்த⁴ன: ॥ 71 ॥**

**स स्वस्थैरुपदिष्टश्च पण्डितो निश्चितात्मकः ।**
**ग्रामाद्ग्रामान्तरं गच्छन् मेधावी मार्गतत्परः ॥ ७२ ॥**

**ஸ ஸ்வஸ்தை²ருபதி³ஷ்டஶ்ச பண்டி³தோ நிஶ்சிதாத்மக: ।**
**க்³ராமாத்³க்³ராமாந்தரம் க³ச்ச²ன் மேதா⁴வீ மார்க³தத்பர: ॥ 72 ॥**

## गत्वा गान्धारदेशं स स्वगृहं प्राप्य पूर्ववत्
## बान्धवैः संपरिष्वक्तः सुखी भूत्वा स्थितोऽभवत् ॥ ७३ ॥

**க3த்வா கா3ந்தா4ரதே3ஶம் ஸ ஸ்வக்3ருஹம் ப்ராப்ய பூர்வவத்**
**பா3ந்த4வை: ஸம்பரிஷ்வக்த: ஸுகீ2 பூ4த்வா ஸ்தி2தோ(அ)ப4வத் ॥ 73 ॥**

| | | |
|---|---|---|
| **यथा**<br>யதா2 | = | எவ்வாறு, |
| **गान्धारदेशीयः**<br>கா3ந்தா4ரதே3ஶீய: | = | காந்தாரதேச புருஷன், |
| **चिरं**<br>சிரம் | = | வெகுநேரம் சென்ற பிறகு, |
| **दैवात्**<br>தை3வாத் | = | அத்ருஷ்டவசமாக, |
| **परिप्राप्तैः**<br>பரிப்ராப்தை: | = | அங்கு வந்த, |
| **दयालुभिः**<br>த3யாலுபி4: | = | இரக்கமுள்ள, |
| **कैश्चित्**<br>கைஶ்சித் | = | சில, |
| **पान्थैः**<br>பாந்தை2: | = | வழிப் போக்கர்களால், |
| **मुकदृष्ट्यादिवन्धनः**<br>முகத்3ருஷ்ட்யாதி3வந்த4ன: | = | கண் முதலியவைகளின் கட்டு அவிழ்க்கப்பட்டவனாய், |
| **सः**<br>ஸ: | = | அவன், |
| **स्वस्थैः**<br>ஸ்வஸ்தை2: | = | ஸ்வஸ்தர்களான அவர்களால், |
| **उपदिष्टश्च**<br>உபதி3ஷ்டஶ்ச | = | மார்க்கம் உபதேசிக்கப்பட்டவனாக, |
| **पण्डितः**<br>பண்டி3த: | = | புத்திமானாகவும், |
| **निश्चितात्मकः**<br>நிஶ்சிதாத்மக: | = | உறுதியான மனமுள்ளவனாகவும், |
| **मेधावी**<br>மேதா4வீ | = | மேதையுடன் கூடினவனாகவும், |
| **मार्गतत्परः**<br>மார்க3தத்பர: | = | வழியிலேயே மனதைச் செலுத்திய வனாயும் இருந்து, |

**ग्रामाद्ग्रामान्तरं** = ஒவ்வொரு கிராமமாக,

**க்³ராமாத்³க்³ராமாந்தரம்**

**गच्छन्** = செல்கின்றவனுய்,

**க³ச்ச²ன்**

**सः** = அவன்,

**ஸ:**

**गान्धारदेशं** = காந்தாரதேசம்,

**கா³ந்தா⁴ரதே³ஶம்**

**गत्वा** = சென்று,

**க³த்வா**

**स्वगृहं** = தன் வீட்டை,

**ஸ்வக்³ருஹம்**

**प्राप्य** = அடைந்து,

**ப்ராப்ய**

**बान्धवैः** = உறவினர்களால்,

**பா³ந்த⁴வை:**

**संपरिष्वक्तः** = தழுவிக் கொள்ளப்பட்டவனுய்,

**ஸம்பரிஷ்வக்த:**

**सुखी** = ஸுகமுள்ளவனுக,

**ஸுகீ²**

**भूत्वा** = ஆகி,

**பூ⁴த்வா**

**पूर्ववत्** = முன்போல்,

**பூர்வவத்**

**स्थितोऽभवत्** = நிலைபெற்றிருந்தான்.

**ஸ்தி²தோ(அ)ப⁴வத்**

ஜனஸஞ்சாரமில்லாத நடுக்காட்டில் தன்னந்தனியாக காந்தார புருஷன் வெகு நேரம் கதறிக்கொண்டிருக்கும் பொழுது அவனுக்கு நல்ல அதிருஷ்டம் இருந்ததால் அந்த வழியாக சில வழிப்போக்கர்கள் கூட்டமாக வந்தார்கள். அவர்களும் இரக்க முள்ளவர்களாயிருந்தார்கள். இவன் கூக்குரலிடுவதைக் கேட்டு "எங்கேயோ மனிதக் குரல் கேட்கிறதே" என்று சொல்லிக்கொண்டு இவன் சமீபம் வந்தனர். இவன் இருக்கும் நிலைமையை நேரில் பார்த்து மனம் இளகி உடனேயே இவனுடைய கால்களிலும், கைகளிலும், கண்களிலும் உள்ள கட்டை அவிழ்த்துவிட்டு, அவனுக்கு உணவும் நீரும் கொடுத்து சாப்பிடச்செய்து ஆச்வாஸப்படுத்தி அவன் வரலாறு முழுவதையும் அவனிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு அவனுக்கு ஆறுதல் கூறி அவனுடைய ஊருக்குப்போய்ச சேரும்வழியையும் விவரமாகக் கூறிவிட்டு அவர்கள் சென்றுவிட்டனர். இவனும் அவர்கள் கூறிய வழி விபரங்கள் முழுவதையும் நன்கு

புரிந்துகொண்டு, மறக்காமல் நிஜனவிலும் வைத்துக் கொண்டு, அவர்கள் சொன்ன விஷயத்தில் ஸந்தேஹமில்லாமல் உறுதியான மனத்துடன் புறப்பட்டு தன் வழியிலேயே மனத்தைச் செலுத்தியவனுய் கிராமம கிராமமாகச் சென்று கடைசியில் காந்தார தேசம் சென்று தன் வீட்டை அடைந்து தன்ஜன விட்டுப்பிரிந்து துன்பமுறும் தாய்தந்தையராலும் மஜனவியாலும் தழுவிக்கொள்ளப்பட்டவனுய் எல்லா துக்கங்களும் விலகி ஆனந்தமடைந்து முன்போலவே நிஜலயாக தன் வீட்டிலேயே இருந்து வந்தான்.

இங்கு காந்தார புருஷன் தன் துக்கம் விலகி ஊர் போய் சேருவதற்கு முதலாவது அவனுக்கு நல்ல அதிருஷ்டம் இருந்தது. அது இருந்ததால்தான் வழிப்போக்கர்கள் தற்செயலாய் அங்கு வந்தனர். இல்லாவிடில் ஜனஸஞ்சாரமில்லாத பயங்கரமான அந்த நடுக் காட்டில் ஒருவரும் வரமாட்டார்கள் பட்டினியாலோ, துஷ்ட மிருகங்களாலோ பிராணஜன விடவேண்டியதுதான். அப்படி வந்தவர்களும் பாதமில்லாமல் ஸ்வஸதர்களாயிருந்ததால்தான் இவனுடைய கட்டை அவிழ்த்து இவன் துன்பத்தை விலக்க முடிந்தது. இவஜனப்போலவே அந்தத்திருடர்களால் மேலும் பலர் கை, கால், கண்கள் கட்டப்பபட்டு இவன் ஸமீபத்தில் வந்தார்களாளுல் அவர்களால் இவன் துக்கம் விலகாது. அவர்கள் வழிப்போக்கர்களாகவும இரககம் உள்ளவர்களாகவும் இருந்தனர். வேறு திருடர்களாகவோ, கலநெஞ்சர்களாகவோ இருந்தால் இவன் அருகில் வரவே மாட்டார்கள். அவர்கள் காந்தாரதேசம செல்லும் வழியை நன்கு அறிந்தவர்களாக இருந்து இவனுக்கு விவரமாக மனதில் நன்கு பதியும்படி வழியை எடுத்துச்சொன்ஞர்கள். இவனுக்கும் அவர்கள் உபதேசித்த மாகக விவரங்கஜள நன்கு புரிந்துகொள்ளவும், அதை மறக்காமல் நிஜனவில் வைத்துக் கொள்ளவும் ஸாமர்த்தியம் இருந்தது. மேலும் அவர்கள் சொல்வதில ஸந்தேஹம கொள்ளாமல் அவர்கள் உபதேசித்த வழியாகவே செல்லுவது என்று தீர்மானம் கொண்டான். கடைசிவரை தான் போகவேண்டிய வழி ஒன்றிலேயே எப்பொழுதும தன் கருத்தைச செலுத்திஞன். இது இல்லாமல் நடுவழியில உள்ள ஊர்கஜளப் பார்க்கத் தங்கிவிட்டால் போய்சசேரமுடியாது. முனகூறிய எல்லாத தகுதிகஜளயும் பெற்றிருந்ததால்தான் சீக்கிரம் சுலபமாக தன் ஊருக்குச் சென்று எல்லாத் துன்பங்களும் விலகி முன்போல ஸுகமாக இருந்தான். இந்தத் தகுதிகள் இல்லாவிடில் இவன் ஊர் போய்சசேர்நதிருக்கமுடியாது.

**(அவதாரிகை)** ஸம்ஸாரியான ஜீவன் பரமானந்த நிஜலயை அடையும் வழிகஜளக் கூறுகிருர்: -

**त्वमप्येवमनेकेषु दुःखदायिषु जन्मसु ।**
**भ्रान्तो दैवाच्छुभे मार्गे जातश्रद्धः सुकर्मकृत् ॥ ७४॥**

**த்வமப்யேவமனேகேஷு து³:க²தா³யிஷு ஜன்மஸு ।**
**ப்⁴ராந்தோ தை³வாச்சு²பே⁴ மார்கே³ ஜாதஶ்ரத்³த⁴: ஸுகர்மக்ருத் ॥ 74॥**

**वर्णाश्रमाचारपरोऽवाप्तपुण्यमहोदयः ।**
**ईश्वरानुग्रहाल्लब्धो ब्रह्मविद्गुरुसत्तमः ॥ ७५॥**

**வர்ஞாஶ்ரமாசாரபரோ(அ)வாப்தபுண்யமஹோத³ய: ।**
**ஈஶ்வரானுக்³ரஹால்லப்³தோ⁴ ப்³ரஹ்மவித்³கு³ருஸத்தம: ॥ 75॥**

**विधिवत्कृतसंन्यासो विवेकादियुतः सुधीः ।**
**प्राप्तो ब्रह्मोपदेशोऽद्य वैराग्याभ्यासतः परम् ॥ ७६ ॥**

**விதி⁴வத்க்ருதஸம்ந்யாஸோ விவேகாதி³யுத: ஸுதீ⁴: ।**
**ப்ராப்தோ ப்³ரஹ்மோபதே³ஶோ(அ)த்³ய வைராக்³யாப்⁴யாஸத: பரம் ॥ 76 ॥**

**पण्डितस्तत्र मेधावी युक्त्या वस्तु विचारयन् ।**
**निदिध्यासनसम्पन्नः प्राप्तो हि त्वं परं पदम् ॥ ७७॥**

**பண்டி³தஸ்தத்ர மேதா⁴வீ யுக்த்யா வஸ்து விசாரயன் ।**
**நிதி³த்⁴யாஸனஸம்பன்ன: ப்ராப்தோ ஹி த்வம் பரம் பத³ம் ॥ 77॥**

| | | |
|---|---|---|
| **एवं**<br>**ஏவம்** | = | இதுபோல், |
| **त्वमपि**<br>**த்வமபி** | = | நீயும், |
| **दुःखदायिषु**<br>**து³:க²தா³யிஷு** | = | துன்பங்களைத் தருகின்ற, |
| **अनेकेषु**<br>**அனேகேஷு** | = | பல, |
| **जन्मसु**<br>**ஜன்மஸு** | = | பிறவிகளில், |
| **भ्रान्तः**<br>**ப்⁴ராந்த:** | = | உழன்று, |
| **दैवात्**<br>**தை³வாத்** | = | அதிருஷ்டவசமாக, |
| **शुभे मार्गे**<br>**ஶுபே⁴ மார்கே³** | = | நல்வழியில், |
| **जातश्रद्धः**<br>**ஜாதஶ்ரத்³த⁴:** | = | நம்பிக்கை ஏற்பட்டவனாய், |
| **सुकर्मकृत्**<br>**ஸுகர்மக்ருத்** | = | நல்ல காரியங்களைச் செய்துகொண்டு, |

| | | |
|---|---|---|
| **वर्णाश्रमाचारपर:**<br>**வர்ணாஶ்ரமாசாரபர:** | = | தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் ஏற்பட்ட ஆசாரங்களிலேயே ஈடுபட்ட வனாய், |
| **अवाप्तपुण्यमहोदय:**<br>**அவாப்தபுண்யமஹோத³ய:** | = | புண்யங்களால் மிகுந்த சிறப்பைப் பெற்று, |
| **ईश्वरानुग्रहात्**<br>**ஈஶ்வரானுக்³ரஹாத்** | = | ஈசுவரனுடைய அருளால், |
| **लब्धब्रह्मविद्गुरुसत्तम:**<br>**லப்³த⁴ப்³ரஹ்மவித்³கு³ருஸத்தம:** | = | ப்ரஹ்மத்தை அறிந்த குருசிரேஷ்டரை அடைந்து, |
| **विधिवत्**<br>**விதி⁴வத்** | = | சாஸ்திர முறைப்படி, |
| **कृतसंन्यास:**<br>**க்ருதஸம்ந்யாஸ:** | = | ஸந்யாஸம் செய்துகொண்டு, |
| **विवेकादियुत:**<br>**விவேகாதி³யுத:** | = | விவேகம் முதலியவைகளுடன் கூடியவனாகவும், |
| **सुधी:**<br>**ஸுதீ⁴:** | = | சிறந்த புத்தியுள்ளவனாகவும், |
| **परं**<br>**பரம்** | = | மிகவும், |
| **वैराग्याभ्यासत:**<br>**வைராக்³யாப்⁴யாஸத:** | = | வைராக்யத்தாலும் அப்யாஸத்தாலும், |
| **अथ**<br>**அத⁴** | = | இப்பொழுது, |
| **प्राप्तब्रह्मोपदेश:**<br>**ப்ராப்தப்³ரஹ்மோபதே³ஶ:** | = | ப்ரஹ்மோபதேசம் பெற்று, |
| **तत्र**<br>**தத்ர** | = | அதில், |
| **पण्डित:**<br>**பண்டி³த:** | = | பண்டிதனாகவும், |
| **मेधावी**<br>**மேதா⁴வீ** | = | மேதாவியாகவும், |
| **युक्त्या**<br>**யுக்த்யா** | = | யுக்தியால், |
| **वस्तु**<br>**வஸ்து** | = | வஸ்துவை, |
| **विचारयन्**<br>**விசாரயன்** | = | விசாரித்துக் கொண்டு, |

**निदिध्यासनसम्पन्नः** = த்யானத்துடன் கூடியவனாய்,

**நிதி³த்⁴யாஸனஸம்பன்னঃ**

**त्वं** = நீ,

**த்வம்**

**परं पदं** = மேலான நிலையை,

**பரம் பத³ம்**

**प्राप्तो हि** = அடைந்துவிட்டாய் அல்லவா.

**ப்ராப்தோ ஹி**

காந்தாரபுருஷனைப்போல ஒவ்வொரு ஜீவனும் அநாதி காலமாக அக்ஞானத்தாலும் விபரீத ஞானத்தாலும் மனதில் ராகமும் த்வேஷமும் நிலைபெற்று பல விதமான கர்மாக்களைச் செய்து செய்து குவித்து அதன் பயனாக அநேகம் பிறவிகளைப்பெற்று பலவிதத்துன்பங்களை அனுபவிக்கிறான். இவ்வாறு உழன்றுகொண்டிருக்கும் பொழுது ஏதோ புண்ய வசத்தால உயரிய மானிடப்பிறவியைப் பெற்று நல்வழியில் சிரத்தையும ஏற்பட்டு ஸத்கர்மாக்களைச் செய்வதுடன் தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட ஸதாசாரங்களிலேயே ஈடுபட்டு, அதனால் புண்யம் பெருகி ஈசுவரானுக்ரஹமும் இருக்குமானால் ப்ரஹ்மவித்தான ஸத்குருவைத் தேடியடைவான். பிறகு முறைப்படி ஸந்யாஸம் செய்துகொண்டு விவேகம், வைராக்யம் முதலான ஸாதனங்கள் திடப்படுமானால் ஸத்குரு இவனுக்கு ப்ரஹ்மத்தை உபதேசிப்பார். இவன் பண்டிதனாகவும் மேதாவியாகவும் இருந்தால் குருவின் உபதேசத்தை மனதில் நிலைநிறுத்தி உபநிஷத்துகளின் தாத்பர்யத்தைத் தெரிந்து கொண்டு தகுந்த யுக்திகளால் விசாரித்துத் தீர்மானித்து ப்ரஹ்மதத்வத்தை த்யானம் செய்து ஆத்மானுபவம் பெறுகிறான் இங்கு ப்ரஹ்மஞானம் ஏற்பட ஸாதன பரம்பரையைக் காட்டுகிறார். அதாவது சிரத்தை, ஸத்கர்மாநுஷ்டானம், வர்ணாச்ரமாசாரம், ஈசுவரானுக்ரஹம், ஸத்குரு லாபம், விவேகவைராக்யாதிகளின் அப்யாஸம், ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம், தத்வஞானம். **(74-77)**

## अतो ब्रह्मात्मविज्ञानमुपदिष्टं यथाविधि ।
## मयाचार्येण ते धीर सम्यक्तत्र प्रयत्नवान् ॥ ७८ ॥

**அதோ ப்³ரஹ்மாத்மவிஜ்ஞானமுபதி³ஷ்டம் யதா²விதி⁴ ।**
**மயாசார்யேண தே தீ⁴ர ஸம்யக்தத்ர ப்ரயத்னவான் ॥ 78 ॥**

## भूत्वा विमुक्तबन्धस्त्वं छिन्नद्वैतात्मसंशयः ।
## निर्द्वन्द्वो निःस्पृहो भूत्वा विचरस्व यथासुखम् ॥ ७९ ॥

**பூ⁴த்வா விமுக்தப³ந்த⁴ஸ்த்வம் சி²ன்னத்³வைதாத்மஸம்ஶய: ।**
**நிர்த்³வந்த்³வோ நி:ஸ்ப்ருஹோ பூ⁴த்வா விசரஸ்வ யதா²ஸுக²ம் ॥ 79 ॥**

**अतः** = ஆகையால்,

**அத:**

| | | |
|---|---|---|
| धीर<br>தீ⁴ர | = | தைர்யமுள்ளவனே! |
| आचार्येण<br>ஆசார்யேண | = | ஆசார்யஞன, |
| मया<br>மயா | = | என்ஞல், |
| ते<br>தே | = | உனக்கு, |
| ब्रह्मात्मविज्ञानं<br>ப்³ரஹ்மாத்மவிஜ்ஞானம் | = | ப்ரஹ்மஸ்வரூபமான ஆத்மாவின் ஞானம், |
| यथाविधि<br>யதா²விதி⁴ | = | முறைப்படி, |
| उपदिष्टं<br>உபதி³ஷ்டம் | = | உபதேசிக்கப்பட்டிருக்கிறது, |
| तत्र<br>தத்ர | = | அதில், |
| सम्यक्<br>ஸம்யக் | = | நன்கு, |
| प्रयत्नवान्<br>ப்ரயத்னவான் | = | முயற்சியுடன்கூடியவஞக, |
| भूत्वा<br>பூ⁴த்வா | = | இருந்து, |
| त्वं<br>த்வம் | = | நீ, |
| विमुक्तबन्धः<br>விமுக்தப³ந்த⁴ | = | பந்தத்திலிருந்து விடுபட்டு, |
| छिन्नद्वैतात्मसंशयः<br>சி²ன்னத்³வைதாத்மஸம்ஶய: | = | த்வைத ப்ரபஞ்சத்திலும் ஆத்மாவிலும் உள்ள ஸம்சயங்கள் எல்லாம் நீங்கிய வஞகவும், |
| निर्द्वन्द्वः<br>நிர்த்³வந்த்³வ: | = | த்வந்த்வங்கள் அற்றவஞகவும், |
| निःस्पृहः<br>நி:ஸ்ப்ருஹ: | = | ஆசையற்றவஞகவும், |
| भूत्वा<br>பூ⁴த்வா | = | ஆகி, |
| यथासुखं<br>யதா²ஸுக²ம் | = | ஸுகமாக, |

| | | |
|---|---|---|
| **विचरस्व**<br>**விசரஸ்வ** | = | ஸஞ்சாரம் செய். |

மிகுந்த தைர்யத்துடன் ஆத்மஜ்ஞான மார்க்கத்தில் வந்துள்ள சிஷ்யனுன உனக்கு முறைப்படி ஆசார்யனுக இருந்து நான் ப்ரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்ற தத்வத்தை உபதேசித்திருக்கிறேன். நீ இதில் நன்கு முயற்சி எடுத்துக்கொண்டு இதை அனுபவத்திற்குக் கொண்டுவந்து அதனுல் த்வைதத்தைப் பற்றியும் ஆத்மா வைப் பற்றியும் இருந்த ஸந்தேஹங்கள் எல்லாம் விலகி, ஸுக துக்கங்கள், சீதோஷ்ணங்கள் முதலான த்வந்த்வங்களால் மனதில் சிறிதும் விகாரமில்லாமல் பற்றற்று ஸுகமாக ஸஞ்சாரம் செய். **(78-79)**

(**அவதாரிகை**) பந்தமோக்ஷ வியவஹாரத்தின் தன்மையைக் கூறுகிறுர்: -

**वस्तुतो निष्प्रपञ्चोऽसि नित्यमुक्तः स्वभावतः ।**
**न ते बन्धविमोक्षौ स्तः कल्पितौ तौ यतस्त्वयि ॥ ८० ॥**

**வஸ்துதோ நிஷ்ப்ரபஞ்சோ(அ)ஸி நித்யமுக்தஃ ஸ்வபா⁴வதஃ ।**
**ந தே ப³ந்த⁴விமோக்ஷௌ ஸ்தஃ கல்பிதௌ தௌ யதஸ்த்வயி ॥ 80 ॥**

| | | |
|---|---|---|
| **वस्तुत:**<br>**வஸ்துதஃ** | = | உண்மையில், |
| **स्वभावत:**<br>**ஸ்வபா⁴வதஃ** | = | இயற்கையாகவே, |
| **निष्प्रपञ्च:**<br>**நிஷ்ப்ரபஞ்சஃ** | = | பிரபஞ்ச ஸம்பந்தமற்றவனுகவும், |
| **नित्यमुक्त:**<br>**நித்யமுக்தஃ** | = | எப்பொழுதும் விடுபட்டவனுகவும், |
| **असि**<br>**அஸி** | = | நீ இருக்கிறுய். |
| **ते**<br>**தே** | = | உனக்கு, |
| **बन्धविमोक्षौ**<br>**ப³ந்த⁴விமோக்ஷௌ** | = | பந்தமும் மோக்ஷமும், |
| **न स्त:**<br>**ந ஸ்தஃ** | = | இல்லை, |
| **यत:**<br>**யதஃ** | = | ஏனெனில், |
| **त्वयि**<br>**த்வயி** | = | உன்னிடத்தில், |

| | | |
|---|---|---|
| **तौ**<br>**தௌ** | = | அவைகள், |
| **कल्पितौ**<br>**கல்பிதௌ** | = | ஆரோபம் செய்யப்பட்டவைகள். |

இதுவரை பல சுலோகங்களால் காந்தார புருஷனை திருஷ்டாந்தமாகக் காட்டி, ஸம்ஸாரத்தில் பத்தனுக இருக்கும் நிலையையும் இதிலிருந்து விடுபடுவதற்கு வேண்டிய வழிகளையும் முக்தனின் நிலைமையையும் கூறினுர். இவைகளெல்லாம் வியவஹார தசையிலதான் பொருந்தும். உண்மையில் விசாரித்துப் பார்த்தோமா ஞல் பிரபஞ்சமே கல்பிதம். இதன் ஸம்பந்தமும் ஆத்மாவுக்கு இல்லை. ஆத்மா நித்ய முக்தமான வஸ்து அஸங்கமானது. இதில் பந்தமும் மோக்ஷமும் அவித்யையால் ஆரோபம் செய்யப்பட்டுள்ளபடியால் உண்மையில் அவை ஆத்மாவுக்குக் கிடையாது ப்ரமத்தால் தன்னிடம் பந்தம் இருப்பதாக எண்ணிககொண்டிருநதான். இந்த ப்ராந்தி தத்வஞானத்தால் நீங்கிவிட்ட து. இதைத் தவிற ஆத்ம ஸ்வரூபத்தில் ஒரு மாறுதலும் இல்லை. அது எப்பொழுதும் ஒரேவிதமாகத் தான் இருக்கிறது. **(80)**

**(அவதாரிகை)** இதற்கு ப்ரமாணமாக மாண்டுக்ய காரிகையிலுள்ள பரமகுரு வின் ஸூக்தியைக் காட்டுகிறுர்: -

**न निरोधो न चोत्पत्तिर्न बद्धो न च साधकः ।**
**न मुमुक्षुर्न वै मुक्त इत्येषा परमार्थता ॥ ८१ ॥**

**ந நிரோதோ⁴ ந சோத்பத்திர்ன ப³த்³தோ⁴ ந ச ஸாத⁴க: ।**
**ந முமுக்ஷுர்ன வை முக்த இத்யேஷா பரமார்த²தா ॥ 81 ॥**

| | | |
|---|---|---|
| **निरोध:**<br>**நிரோத⁴:** | = | ப்ரளயம், |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **उत्पत्तिञ्च**<br>**உத்பத்திஞ்ச** | = | ஸிருஷ்டியும், |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **बद्धः**<br>**ப³த்³த⁴:** | = | கட்டுப்பட்டவன், |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **साधकश्च**<br>**ஸாத⁴கஶ்ச** | = | ஸாதனங்களை அனுஷ்டிக்கிறவனும், |

| | | |
|---|---|---|
| **न** | = | இல்லை, |
| **ந** | | |
| **मुमुक्षु:** | = | மோக்ஷம் அடையவிரும்புகிறவன், |
| **முமுக்ஷு:** | | |
| **न** | = | இல்லை, |
| **ந** | | |
| **मुक्त:** | = | விடுபட்டவனும், |
| **முக்த:** | | |
| **न** | = | இல்லை, |
| **ந** | | |
| **इति एषा** | = | என்ற இது, |
| **இதி ஏஷா** | | |
| **परमार्थता** | = | உண்மை நிலை. |
| **பரமார்த²தா** | | |

மாண்டூக்ய காரிகையில இரண்டாவதான வைதத்ய பிரகரணத்தில் 32-வது சுலோகம் இது இந்தப்ரகரணத்தில் ஸ்வப்னத்தை திருஷ்டாந்தமாகக் காட்டிப் பறபல யுக்திகளால் ஜாக்ரத்தில் காணும் ப்ரபஞ்சம் முழுவதும் பொய் என்று தீர்மானம் செய்கிறுர். இந்த ப்ரகரணததின் கருத்து முழுவதும் இந்த சுலோகத்தில் அமைந்திருப்பதாக இதன் அவதாரிகையில் பகவத்பாதாள் கூறுகிறுர். ஆத்மா ஒன்றே உண்மைப் பொருள். மற்றவை எல்லாம் பொய் என்பது நிரூபணமாகி விட்டபடியால் த்வைதத்தை ஒட்டிய வியவஹாரங்கள் எல்லாம் உண்மையில் இல்லை. ஆகவே ஜகத்தின் ஸிருஷ்டி ப்ரளயங்களோ, பத்தனுன ஸம்ஸாரி நிலையோ, ஸாதனங்களை அனுஷ்டிக்கும் நிலையோ, மோக்ஷமடைய விரும்புவதோ, பந்தத்திலிருந்து விடுபடுவதோ ஒன்றும் கிடையாது என்பதுதான வாஸ்தவம். இவை எல்லாம் அவித்யையால் ஏற்பட்ட வியவஹாரங்கள். ஆகையால் பொய்தான். இதே சுலோகத்தை விவேகசூடாமணியிலும் பகவத்பாதாள் சேர்த்திருக்கிறுர். **(81)**

**(அவதாரிகை)** தத்வோபதேசத்தை உபஸம்ஹாரம் செய்கிறுர்: -

**श्रुतिसिद्धान्तसारोऽयं तथैव त्वं स्वया धिया ।**
**संविचार्य निदिध्यास्य निजानन्दात्मकं परम् ॥ ८२ ॥**

**ஶ்ருதிஸித்³தா⁴ந்தஸாரோ(அ)யம் ததை²வ த்வம் ஸ்வயா தி⁴யா ।**
**ஸம்விசார்ய நிதி³த்⁴யாஸ்ய நிஜானந்தா³த்மகம் பரம் ॥ 82 ॥**

**साक्षात्कृत्वाऽपरिच्छिन्ना द्वैतब्रह्माक्षरं स्वयम् ।**
**जीवन्नेव विनिर्मुक्तो विश्रान्त: शान्तिमाश्रय ॥ ८३ ॥**

**ஸாக்ஷாத்க்ருத்வா(அ)பரிச்சி²ன்ன த்³வைதத்ரஹ்மாக்ஷரம் ஸ்வயம் ।**
**ஜீவன்னேவ விநிர்முக்தோ விஶ்ராந்த꞉ ஶாந்திமாஶ்ரய ॥ 83 ॥**

| | | |
|---|---|---|
| **अयं**<br>**அயம்** | = | இது, |
| **श्रुतिसिद्धान्तसार:**<br>**ஶ்ருதிஸித்³தா⁴ந்தஸார꞉** | = | உபநிஷத் ஸித்தாந்தத்தின் ஸாரம், |
| **तथैव**<br>**ததை²வ** | = | அவ்விதமே, |
| **त्वं**<br>**த்வம்** | = | நீ, |
| **स्वया धिया**<br>**ஸ்வயா தி⁴யா** | = | தன் புத்தியால், |
| **संविचार्य**<br>**ஸம்விசார்ய** | = | நன்கு விசாரித்து, (மனனம் செய்து), |
| **निदिध्यास्य**<br>**நிதி³த்⁴யாஸ்ய** | = | த்யானம்செய்து, |
| **निजानन्दात्मकं**<br>**நிஜானந்தா³த்மகம்** | = | தன் ஆனந்தஸ்வரூபமாயும், |
| **परं**<br>**பரம்** | = | மேலானதும், |
| **अपरिच्छिन्नाद्वैतत्रह्माक्षरं**<br>**அபரிச்சி²ன்ன த்³வைதத்ரஹ்மாக்ஷரம்** | = | எல்லையற்றதும் இரண்டற்றதும் அழிவற்றதுமான ப்ரஹ்மஸ்வரூபத்தை, |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தானாகவே, |
| **साक्षात्कृत्वा**<br>**ஸாக்ஷாத்க்ருத்வா** | = | நேரில் ப்ரத்யக்ஷமாக அறிந்து, |
| **जीवन्नेव**<br>**ஜீவன்னேவ** | = | உயிர்வாழும்பொழுதே, |
| **विनिर्मुक्त:**<br>**விநிர்முக்த꞉** | = | பந்தம் விலகியவனாய், |
| **विश्रान्त:**<br>**விஶ்ராந்த꞉** | = | துன்பம் அற்றவனாய், |
| **शान्तिं**<br>**ஶாந்திம்** | = | அமைதியை, |

**आश्रय** = அடைவாயாக.

**ஆ்ஶ்ரய**

இதுவரை உனக்கு உபதேசித்தது உபநிஷத்துக்களின் ஸாரம். இவ்வளவுதான் ஆசார்யாள் செய்யக்கூடியது. இதற்குமேல் நீ தான் தானுக முயற்சி எடுத்துக் கொண்டு பலனை அடையவேண்டும். உனக்கு சிரவணம் கிடைத்து விட்டது. அத்வைதமான ப்ரஹ்மத்தில் தான் உபநிஷத்துக்களின் தாத்பர்யம் என்பது தெரிந்து விட்டது. இதனுல் அஸம்பாவனை நிவர்த்தியாகி விட்டது. இனிமேல் உன் புத்தியைக் கொண்டு நன்கு விசாரித்து மனனம் செய்ய வேண்டும் அதாவது தக்க யுக்திகளைக் கொண்டு இந்த ஸித்தாந்தத்தை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும். அப்பொழுது ஸம்சய பாவனை விலகும். பிறகு வேறு ஒன்றையும் நினையாமல் இதையே தியானம் செய்ய வேண்டும். அப்பொழுது விபரீத பாவனையும் விலகிவிடும். அப்பொழுது ஸச்சிதானந்த ஸ்வரூபமானதும் பரிச்சேதமற்றதும் அழிவற்றதும் ஆத்ம ஸவரூபமுமான அத்வைத ப்ரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரம் ஏற்படும். எல்லா பந்தமும் விலகி ஒரு விகாரமும் இல்லாமல் பரமமான சாந்தியைப் பெற்று ஜீவன்முக்தனுக விளங்குவாய். **(82-83)**

(**அவதாரிகை**) கடைசி நான்கு சுலோகங்களால் ஸ்ரீஸத்குருவின் மஹிமை யை விரிவாகக் கூறுகிறுர்: -

**विचारणीया वेदान्ता वन्दनीयो गुरुः सदा ।**
**गुरूणां वचनं पथ्यं दर्शनं सेवनं नृणाम् ॥ ८४ ॥**

**விசாரணீயா வேதா³ந்தா வந்த³னீயோ கு³ரு꞉ ஸதா³ ।**
**கு³ரூணும் வசனம் பத்²யம் த³ர்ஶனம் ஸேவனம் ந்ருணும் ॥ 84 ॥**

**वेदान्ताः** = உபநிஷத்துக்கள்,

**வேதா³ந்தா꞉**

**विचारणीयाः** = விசாரிக்கத்தக்கவை,

**விசாரணீயா꞉**

**सदा** = எப்பொழுதும்,

**ஸதா³**

**गुरुः** = ஆசார்யர்,

**கு³ரு꞉**

**वन्दनीयः** = வணங்கத்தக்கவர்,

**வந்த³னீய꞉**

**गुरूणां** = ஆசார்யர்களுடைய,

**கு³ரூணும்**

**वचनं** = உபதேசமும்,

**வசனம்**

**दर्शनं** = தர்சனமும்,

**த³ர்ஶனம்**

**सेवनं** = ஸேவையும்,

**ஸேவனம்**

**नृणां** = மனிதர்களுக்கு,

**ந்ருணும்**

**पथ्यं** = நன்மை பயக்க வல்லது.

**பத்²யம்**

ஞானத்தை அடைய விரும்புபவன் உபநிஷத்துக்களின் அர்த்தத்தை ஸதா நன்கு விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆனுல் இது அனுபவத்திற்கு வர வேண்டுமானுல் குருவின் கிருபை வேண்டும். இதற்கு குருவை அடிக்கடி தர்சனம் செய்யவேண்டும். அவருக்கு சுச்ரூஷை செய்யவேண்டும். அவரை நமஸ்கரிக்க வேண்டும். அவர் சொன்னபடி கேட்க வேண்டும். இவைகளைச் செய்யாத வரையில் உபநிஷத்தை எத்தனை தடவை விசாரித்தாலும் ஞானுனுபவம் ஏற்படாது இவைகளைச் செய்வதால் ஸாதாரண மனிதர்களுக்கும் எல்லாவித நன்மைகளும் ஏற்படும். **(84)**

**गुरुर्ब्रह्म स्वयं साक्षात्सेव्यो वन्द्यो मुमुक्षुभिः ।**
**नोद्वेजनीय एवायं कृतज्ञेन विवेकिना ॥ ८५ ॥**

**கு³ருர்ப்³ரஹ்ம ஸ்வயம் ஸாக்ஷாத்ஸேவ்யோ வந்த்³யோ முமுக்ஷுபி⁴: ।**
**நோத்³வேஜனீய ஏவாயம் க்ருதஜ்ஞேன விவேகினு ॥ 85 ॥**

**स्वयं** = தான்,

**ஸ்வயம்**

**साक्षात्** = நேராக,

**ஸாக்ஷாத்**

**ब्रह्म** = ப்ரஹமஸ்வரூபமாக உள்ள,

**ப்³ரஹ்ம**

**गुरुः** = குருவானவர்,

**கு³ரு:**

**मुमुक्षुभिः** = மோக்ஷம் அடைய ஆசையுள்ளவர்களால்,

**முமுக்ஷுபி⁴:**

**सेव्यः** = ஸேவிக்கத்தக்கவர்,

**ஸேவ்ய:**

**वन्द्यः** = வணங்கத்தக்கவர்,

**வந்த்³ய:**

| | | |
|---|---|---|
| **कृतज्ञेन** | = | நன்றியறிவுள்ள, |
| **க்ருதஜ்ஞேன** | | |
| **विवेकिना** | = | விவேகமுள்ள சிஷ்யனால், |
| **விவேகிநா** | | |
| **अयं** | = | இவர், |
| **அயம்** | | |
| **न उद्वेजनीय एव** | = | துன்பம் அடையும்படி |
| **ந உத்³வேஜனீய ஏவ** | | செய்யத்தக்கவரேயல்ல. |

முமுக்ஷுவானவன் எந்த ப்ரஹ்மத்தை அறிய முயற்சிக்கிறனோ அந்த ப்ரஹ்மமாகவே குரு விளங்குகிறர். ஆகையால் கட்டாயம் குருவை வந்தனம் செய்து தன் விநயத்தைக்காட்டவேண்டும். அவருக்கு சுசரூஷை செய்ய வேண்டும். உலகில் ஸாதாரண உதவி செய்தவனையே நாம் நன்றியுடன் போற்றவேண்டியது அவசியமாயிருக்கும பொழுது ப்ரஹ்மஞானத்தைக் கொடுத்து மஹோபகாரம் செய்யும் குருவைப்பற்றிக் கேட்பானேன்? விவேகியாக உள்ளவன் எப்பொழுதும் அவரிடம் நன்றி பாராட்ட வேண்டும். குருவின் மனதிற்குத் தாபம் உண்டாகும்படி யான காரியங்களை ஒருபொழுதும் செய்யக்கூடாது. அவ்விதமான வார்த்தைகளையே பேசக்கூடாது. **(85)**

**(அவதாரிகை)** ஞானிக்கும் குருபக்தி அவசியமெனக் கூறுகிறர்: -

**यावदायुस्त्वया वन्ध्यो वेदान्ता गुरुरीश्वरः ।**
**मनसा कर्मणा वाचा श्रुतिरेवैष निश्चयः ॥ ८६ ॥**

**யாவதா³யுஸ்த்வயா வந்த்⁴யோ வேதா³ந்தா கு³ருரீஶ்வரः ।**
**மனஸா கர்மணா வாசா ஶ்ருதிரேவைஷ நிஶ்சயः ॥ 86 ॥**

| | | |
|---|---|---|
| **त्वया** | = | உன்னால், |
| **த்வயா** | | |
| **यावदायु:** | = | ஆயுள் உள்ளவரை, |
| **யாவதா³யு:** | | |
| **मनसा** | = | மனத்தினாலும், |
| **மனஸா** | | |
| **कर्मणा** | = | செய்கையாலும், |
| **கர்மணா** | | |
| **वाचा** | = | வாக்காலும், |
| **வாசா** | | |
| **वेदान्त:** | = | உபநிஷத்தும், |
| **வேதா³ந்த:** | | |

**गुरुः** = ஆசாரியரும்,

**கு³ரு:**

**ईश्वरः** = ஈசுவரனும்,

**ஈஶ்வர:**

**वन्धः** = வணங்கத்தக்கவர்,

**வந்த⁴:**

**एष निश्चयः** = இந்தத்தீர்மானம்,

**ஏஷ நிஶ்சய:**

**श्रुतिरेव** = வேதம் தான்.

**ஶ்ருதிரேவ**

ஞானம் அடைந்த பிறகும்கூட சரீரமுள்ளவரை உபநிஷத், குரு, ஈசுவரன் இம் மூவரையும் மனஸ், வாக்கு, செய்கை இம் மூன்று கரணங்களாலும் போற்ற வேண்டும். இது வேதத்தின் உறுதியான கட்டளை. இதற்கு மாறுதலே கிடையாது. ஞானம் கிடைப்பதற்காக முன்னும், நன்றி மறத்தல் என்ற தோஷம் வராமலிருப்ப தற்காக ஞானம் கிடைத்த பின்பும் இம் மூவர்களையும் போற்றவேண்டும். **(86)**

**भावाद्वैतं सदा कुर्यात्क्रियाद्वैतं न कर्हिचित् ।**
**अद्वैतं त्रिषु लोकेषु नाद्वैतं गुरुणा सह ॥ ८७ ॥**

**பா⁴வாத்³வைதம் ஸதா³ குர்யாத்க்ரியாத்³வைதம் ந கர்ஹிசித் ।**
**அத்³வைதம் த்ரிஷு லோகேஷு நாத்³வைதம் கு³ருணா ஸஹ ॥ 87 ॥**

**भावाद्वैतं** = மனோபாவனையில் அத்வைதத்தை,

**பா⁴வாத்³வைதம்**

**सदा** = எப்பொழுதும்,

**ஸதா³**

**कुर्यात्** = செய்யலாம்,

**குர்யாத்**

**कर्हिचित्** = ஒரு இடத்திலும்,

**கர்ஹிசித்**

**कियाद्वैतं** = செய்கையில் அத்வைதத்தை,

**கியாத்³வைதம்**

**न** = செய்யக்கூடாது,

**ந**

**त्रिषु लोकेषु** = மூவுலகங்களிலும்,

**த்ரிஷு லோகேஷு**

**अद्वैतं** = அத்வைத பாவனை செய்யலாம்,

**அத்³வைதம்**

| | | |
|---|---|---|
| **गुरुणा सह** | = | ஆசார்யனோடுகூட, |
| **கு³ருணா ஸஹ** | | |
| **अद्वैतं** | = | அத்வைத பாவனை, |
| **அத்³வைதம்** | | |
| **न** | = | செய்யக்கூடாது, |
| **ந** | | |

உலகிலுள்ள பொருள்களில் பலவித வேற்றுமைகளும் ஏற்றத் தாழ்வுகளும் காணப்படுகின்றன ஆனல் எங்கும் ஒரே ப்ரஹ்ம வஸ்து ஸமமாகவே இருக்கிறது. வேற்றுமைகளையும் ஏற்றத்தாழ்வுகளையும் மறந்து எங்கும் ஸமமான ப்ரஹ்மத்தை தியானிப்பதுதான் அத்வைத பாவனை என்பது இதை மனதால்தான் செய்யமுடியும். மனதால் அத்வைத பாவனை பண்ணலாம். செய்கையில் அத்வைதத்தைக் காட்டவே முடியாது. உலக வியவஹாரங்களில் ஈடுபட்டு காரியங்களைச் செய்யும்பொழுது அந்தந்த வேற்றுமைகளை மதித்துத்தான் நடக்கவேண்டும். இங்கும் அத்வைதத்தைக் காட்டினல் காரியங்களே நடைபெறுது. விபரீத விளைவுகளும் ஏற்படும். ஆகையால் மனோபாவத்தில் அத்வைதமே தவிற க்ரியையில் அத்வைதம் கிடையாது. பாவாத் வைதத்தையும் குருவினிடம் காட்டக்கூடாது குருவைத் தவிற மற்ற இடங்களில் தான் காட்டலாம் மூவுலகிலும் உள்ள எல்லாப் பொருள்களையும் தன்னுடன் ஒன்றுக மனத்தில் பாவனை செய்யலாம் இதுபோல் குருவும் தானும் ஒன்றுதான் என்ற எண்ணம் கொள்ளவேகூடாது. ஜீவன் முக்தனும்கூடத் தன் குருவைப் பூஜ்யராகவே நினைக்க வேண்டும் ஒவ்வொருவனும் ஸ்ரீஸத்குருவின் அருளால்தான் பரமாநந்த நிலையை அடைகிறன். **(87)**

**इति श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यस्य**
**श्रीगोविन्दद्भगवत्पूज्यपादशिष्यस्य**
**श्रीमच्छङ्करभगवतः कृतौ**
**तत्त्वोपदेशः सम्पूर्णः ॥**

**இதி ஸ்ரீமத்பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யஸ்ய**
**ஸ்ரீகோ³விந்த³த்³ப⁴க³வத்பூஜ்யபாத³ஶிஷ்யஸ்ய**
**ஸ்ரீமச்ச²ங்கரப⁴க³வத꞉ க்ருதௌ**
**தத்த்வோபதே³ஶ꞉ ஸம்பூர்ண꞉ ॥**

**தத்வோபதே³ஶம் முற்றிற்று.**